# கல்கி

KALKI 8.7.90 ரூ. 2.50



இந்தியாவிலேயே முதல் முறையாக

# எப்போதும் உலர்ந்த உணர்வு+ மும்மடங்கு ஈர்ப்பு

பிரிமாதான் எனக்கு அளிக்கிறது
அந்த உண்மையான தூய உணர்வையும்,
உலர்ந்த தன்மையையும்

ஆம்... அதிநவீன ரோஸ் நிற பிரிமா தான் இரண்டு தனிச்சிறப்பு அம்சங்களைக் கொண்ட - இந்தியாவின் முதல் சானிடரி நாப்கின்





பிரிமாவின் பிரத்யேகமான மென்மையான **எப்போதும் உலர்ந்த** மேலுறை ஈரத்தை உறிஞ்சிக் கொள்வதோடு - உங்களுக்கு தூய உணர்வையும் உலர்ந்த தன்மையையும் அளிக்கிறது.

பிரிமாவின் **மூன்று உள்மடிப்புகள்** மிக அதிகமான உறிஞ்சும் தன்மையை அளிக்கிறது.

இத்துடன் -
அதிக இதம் தரும் வளைந்த ஓரங்கள்;
கூடுதல் பாதுகாப்பு அளித்திடும்
ரோஸ் நிற பிளாஸ்டிக் கவசம்.






PRIMA
Clean & Dry
Sanitary Napkins

ரெகுலர்: • பெல்ட் • பெல்ட்லெஸ் எக்ஸ்ட்ரா லார்ஜ்: • பெல்ட் • பெல்ட்லெஸ்
10 நாப்கின்கள் கொண்ட பாக்கெட்களும், 2 நாப்கின்கள் கொண்ட கைக்கு அடக்கமான பாக்கெட்களும்

குழு அளித்திடும்
No. 1 தயாரிப்பு

**வாங்குவீர் பிரிமா,**
**அந்த உண்மையான– தூய மற்றும் உலர்ந்த தன்மையை உணர்ந்திட**

LINTAS M PMA P2 2416 TM



* திருப்பிப் போடு தோசையை!

### டிங்டாங் டில்லி:

# வி.ஐ.பி.களுக்கு ஸ்பெஷல் டீ?

●● வணிகத்துறை அமைச்சர் அருண் நேருவுக்கு உத்யோக் பவனில் விநியோகிக்கப்படும் தேநீரை நினைத்தாலே எரிச்சல். ''பல வெளிநாட்டுக் குழுக்கள் இங்கே விவாதங்களில் பங்கு கொள்ள வரும்போது, இத்தனை மோசமான டீயா அவர்களுக்குக் கொடுப்பது? டீ போர்டு காண்டீனில் நல்ல தேநீர் தயாரிக்க யாருக்குமே தெரியாதா?'' என்று சத்தம் போட்டார் ஒரு நாள். ''விஐபிக்களுக்கு மட்டும் வேண்டுமானால் தனியாக டீ தருவிக்கலாம்'' என்று ஒரு 'புத்திசாலி' அதிகாரி யோசனை சொன்னாரோ இல்லையோ, அருண் நேருவின் முகம் கோபத்தால் சிவந்தது. ''அப்படியென்றால் மற்றவர்கள் எல்லாம் முக்கியமில்லையா? முதலில் டீ போர்டு காண்டீனில் உள்ளவர்கள், இந்திய சுற்றுலாக் கழகத்தில் நல்ல டீ போட பயிற்சி எடுத்துக் கொள்ளட்டும்!'' என்று வெடித்தார்!

●● பஞ்சாபில் புதிய ஆளுனராக வீரேந்திர வர்மா பொறுப்பேற்ற போது, ஹரியானா ஆளுனர் தனிக்லால் மண்டலும், பனார்சி தாஸ் குப்தாவும் ஏராளமான ஹரியானா அதிகாரிகளும்தான் வந்திருந்தார்கள். பஞ்சாப் ஆட்கள் கொஞ்சம் பேரே வந்திருந்தனர் என்பது கவனத்தைக் கவர்ந்தது. 'என் உயிரைக் கொடுத்தேனும் பஞ்சாபைக் காப்பாற்றுவதற்காகத்தான் இங்கே ஆளுனர் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன்' என்றார் வர்மா. பழுத்த அரசியல்வாதியான அவருக்கு இப்போதுதான் சோதனையே ஆரம்பமாகியிருக்கிறது.

●● 'அசோசேம்' எனப்படும் தொழிலதிபர்கள் சங்கக் கூட்டம் தில்லியில் நடந்தது. அமைச்சர் அருண் நேரு தலைமை வகித்தார். ''உத்யோக் பவனில் இனி தொழிலதிபர்களின் பிரதிநிதிகள் கால் தேய நடக்க வேண்டியிருக்காது!'' என்று அருண் நேரு அறிவித்த போது, பலத்த கைதட்டலுடன் வரவேற்றார்கள் தொழிலதிபர்கள். ''எல்லாக் கட்டுப்பாடுகளையும் படிப்படியாகத் தளர்த்துவோம்!'' என்றார் உற்சாகமாக. அப்போது கைதட்டல் இருந்திருக்காது! தொழிலதிபர்கள் பலருக்கும் கட்டுப்பாடுகள் இருந்தால்தானே கொண்டாட்டம்!

●● சசிகுமாருக்கு டி.வி.யில் வாரம் ஒரு நிகழ்ச்சி தயாரித்து அளிக்க தூர்தர்சன் அனுமதி அளித்திருக்கிறது. இந்தியாவில் நிகழும் கலாசார நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கும்படி சசிகுமாரைக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். பட்ஜெட் எவ்வளவு? ஏழு லட்சம் ரூபாயாம்! 'ஃபோகஸ்' நிகழ்ச்சி ஒன்றரை லட்சம் ரூபாயிலேயே முடிந்து விடும் போது, இதற்கு மட்டும் ஏழு லட்சம் ஏன் என்று முதலில் யோசித்தார்கள். பிறகு ஓகே சொல்லி விட்டார்கள்!

●● புதிய ஹரியானா முதல்வர் பனார்சி தாஸ் குப்தா, பத்திரிகையாளர்களுக்கு ஒரு விருந்து கொடுத்தார். அப்போது நிருபர்கள், ''நீங்கள் இன்னும் சௌடாலா சொன்னபடிதான் ஆடுகிறீர்களாமே? அவர்தான் உண்மையில் ஆட்சி நடத்துகிறார் — நீங்கள் ஒப்புக்குத்தான் முதல்வர் என்கிறார்களே? உண்மையா?'' என்று கேட்டார்கள். பனார்சி தாஸ் குப்தாவுக்குத் தாங்க முடியவில்லை. ''நான் மே 23 — ஆம் தேதி ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொண்டேன். அதற்குப் பிறகு இதுவரை சௌடாலா எனக்கு ஒரு தடவையாவது டெலிபோன் கூடச் செய்யவில்லை. இதுதான் உண்மை!'' என்றார் அழுத்தம் திருத்தமாக. சௌடாலா போன் கூடச் செய்யவில்லையே, தம் மீது என்ன கோபமோ என்று குப்தா கவலைப்பட்டுக் கொண்டிருக்கலாம் என்று தோசையைத் திருப்பிப் போட்டுப் பேசுகிறார்கள் இப்போது!

●● காஷ்மீரில் பொதுத்துறை நிறுவனங்கள் பல சரியாக இயங்குவதில்லை. ஏகப்பட்ட நஷ்டம். அதற்காக ஊழியர்களுக்குச் சம்பளத்தைக் குறைக்கவும் முடியாது. நிறுவனங்களை அமைதி நிலவும் வேறு இடத்துக்குக் கொண்டு போகவும் முடியவில்லை. ஏன்? ஊழியர்களின் வாழ்க்கைப் பிரச்னை ஒருபுறமிருக்க, உலகுக்குக் காஷ்மீரில் பெரிய பிரச்னை எதுவும் இல்லை என்று காண்பித்துக் கொள்ளவும் வேண்டுமே!

●● பேராசிரியர் மது தந்தவதே அடித்த ஜோக் ஒன்று: ''முந்தைய அரசு சார்ந்திருந்தது 'ரிலையன்ஸ்' கொள்கை. இப்போது நாங்கள் சார்ந்திருப்பது 'செல்ஃப் ரிலையன்ஸ்' கொள்கை!''

தொகுப்பு: சித்தார்த்

* சோதனை ஆரம்பம்!



* சத்தம் போட்டார்!



# எல்லோருக்கும் கல்வி–எப்படிச் சாதித்தார்கள்?



• சுஜித்

**'யாவினும் புண்ணியங் கோடி ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்' என்று பாரதி பாடியதைப் புரிந்து கொண்டு வாழ்பவர்கள் தமிழர்கள் அல்லர்; கேரளத்திலுள்ள எர்ணாகுளத்து மக்களே என்பதை நிரூபிக்கிறது இக்கட்டுரை...**

**கௌ**சல்யாவுக்கு வயது அறுபது. இரண்டு மகன்கள். ஒரு மகள். கொச்சின் துறைமுகத்தில் பணியாற்றிய கணவர் இறந்து விட்டார். பள்ளி என்பதையே பார்த்தறியாதவர் கௌசல்யா. பாங்கில் பென்ஷன் பணம் வாங்கும் போது, போடுவது கைநாட்டு. சமயத்தில் நாலு பேர் நடுவில் கைநாட்டுப் போடும் போது அவருக்கே வெட்கமாக இருக்கும்! இனியும் தம்மால் எழுதப் படிக்கத் தெரிந்து கொள்ள முடியுமா என்று அவர் ஏங்கிக் கொண்டிருந்த சமயத்தில்தான் அந்தச் சந்தோஷச் செய்தி வந்தது.

''கிராமத்து இளைஞர்கள் படிப்புச் சொல்லித் தருகிறார்களாம்!'' — பக்கத்து வீட்டு குட்டியம்மை வந்து சொன்னபோதே, கௌசல்யாவுக்கு ஆர்வம் ஆரவாரம் செய்து கொண்டு புறப்பட்டது. மகன்களும் மகளும் உற்சாகமூட்ட கௌசல்யா அரிச்சுவடியிலிருந்து ஆரம்பித்தார். ஆறே மாதம்... இப்போது கௌசல்யா வங்கியில் கையெழுத்துப் போட்டுப் பணத்தை எடுக்கிறார்! அது மட்டுமா? பத்திரிகைகள் படிக்

• விக்னி ஜோசப்





• கௌசல்யா



* இருபத்து நான்கு மணி நேரமும் செயல்படும் எர்ணாகுளம் கல்விக் குழு அலுவலகம்

கிறார்; நாட்டு நடப்புகளைத் தெரிந்து கொள்கிறார். கொச்சி நகருக்கு அருகே, தென்னை மரங்கள் சூழ்ந்திருக்கும் அழகான கடற்கரைக் கிராமமான பெரும்படப்பு கிராமத்தில் நாங்கள் கௌசல்யாவைச் சந்தித்த போது, ''நடைமுறை வாழ்க்கைக்குத் தேவையான கல்வியை நான் கற்றுக் கொண்டு விட்டேன். இன்னும் தொடர்ந்து படிக்க இருக்கிறேன்'' என்று பெருமிதத்துடன் சொன்னார்.

இன்று எர்ணாகுளம் மாவட்டத்தில் ஐந்து முதல் அறுபது வயது வரை உள்ள சுமார் ஒன்றரை லட்சம் பேர் கௌசல்யாவைப் போலவே எழுதப் படிக்கத் தெரிந்து கொண்டு, வாழ்க்கையைப் புதுப்பித்துக் கொண்டிருக்கிறார்கள். கிட்டத்தட்ட ஆறு மாத காலத்தில் நடந்த அற்புத சாதனை இது. எப்படிச் சாத்தியமாயிற்று?

'மக்களிடையே கல்வியறிவு இல்லாதது கண்டு நாம் வெட்கமும் வேதனையும் அடைய வேண்டும்' என்றார் காந்திஜி. ஆனால் இந்தியாவில் 1981ம் ஆண்டு எடுக்கப்பட்ட சென்ஸஸ்படி மொத்த மக்கள் தொகையான அறுபத்தெட்டுக் கோடியில் கல்லாதவர்களின் எண்ணிக்கை 43 கோடி! அதாவது உலகில் உள்ள கல்லாதவர்களின் மொத்த எண்ணிக்கையில் பாதிக்கு மேற்பட்டவர்கள் இந்தியாவில் தான் இருக்கிறார்கள்! இந்த நிலையைப் போக்குவதற்காகத் துவங்கப்பட்ட முதியோர் கல்வித் திட்டம், கிராமப்புற நடைமுறைக் கல்வித் திட்டம் போன்ற திட்டங்களாலும் கல்லாமையைப் போக்க முடியவில்லை. இந்த நிலையில்தான் இந்திய அரசின் மனிதவள மேம்பாட்டுத் துறை தேசிய கல்வியறிவு இயக்கம் (National Literacy



* அஜிதா

Mission) ஒன்றைத் துவங்கியது.

இது ஒருபுறமிருக்க ஏற்கெனவே கேரளாவில் 'கேரள சாஸ்திர ஸாஹித்ய பரிஷத்' என்று ஓர் இயக்கம். ஐந்து லட்சம் உறுப்பினர்களைக் கொண்ட இந்த இயக்கத்தில் டாக்டர்கள், எஞ்ஜினியர்கள், பேராசிரியர்கள் என்று பலரும் இருந்தார்கள். மக்களிடையே அறிவியல் அறிவையும், சுகாதாரம், காட்டு வளம், சுற்றுச் சூழல் பற்றிய அறிவையும் வளர்த்துக் கொண்டிருந்தார்கள். கூடவே மதுபானங்கள், போதை மருந்துகள் போன்றவற்றின் தீமைகளைப் பற்றியும் மக்களிடையே எடுத்துச் சொல்லி வந்தார்கள். மக்களிடையில் மட்டுமல்ல; குழந்தைகளும் மேற்கண்ட அறிவைப் பெற வேண்டுமென்பதற்காகக் குழந்தைகளுக்கான பத்திரிகைகளையும் நடத்தி வந்தார்கள். இந்தப் பணிகள் காரணமாக கேரள சாஸ்திர ஸாஹித்ய பரிஷத் இயக்கம் ஒரு மக்கள் இயக்கமாகவே மலர்ந்தது!



ஆர். தியாகராஜன் பொட்டி. கே. கே. ரவி — உதவித் திட்ட அலுவலர்கள்.

இந்த நிலையில்தான் மனிதவள மேம்பாட்டுத் துறை துவங்கிய 'தேசியக் கல்வியறிவு இயக்கம்' இந்த கேரள சாஸ்திர ஸாஹித்ய பரிஷத்தின் கவனத்தைக் கவர்ந்தது. அதன் மூலம் கேரள மாநிலத்திலுள்ள கல்லாத மக்கள் அனைவருக்கும் கல்வி கற்பிப்பதற்கான ஒரு பெரிய திட்டமொன்றைத் தீட்டி, 1985ல் தேசியக் கல்வியறிவு இயக்கத்திடம் சமர்ப்பித்தது பரிஷத். பரிஷத்தின் திட்டத்துக்குத் தேசியக் கல்வியறிவு இயக்கம் தனது முழு ஒத்துழைப்பையும் கொடுக்கத் தயாரானது! ஆயினும் இந்த மாபெரும் திட்டத்தைச் செயல்படுத்த முடியுமா என்கிற சந்தேகமும் எழுந்தது. காரணம், திட்டம் முழுமையாகச் செயல்படுத்தப்பட ஆயிரக்கணக்கான இளைஞர்களின் ஒத்துழைப்போடு, பல கோடி ரூபாய்களும் செலவாகும் என்கிற நிலைதான்!

இந்த நிலையில் தான் உதவிக்கரம் நீட்ட முன்வந்தார் எர்ணாகுளத்தின் மாவட்ட ஆட்சித் தலைவர் கே. ஆர். ராஜன். ''பரீட்சார்த்தமாக முதலில் எர்ணாகுளம் மாவட்டத்தில் இத் திட்டத்தைச் செயல்படுத்திப் பார்க்கலாம். அதற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் நான் செய்து தருகிறேன்'' என்றார்.

அதே போல் தேசியக் கல்வியறிவு இயக்க உறுப்பினராக இருந்த கேரளாவைச் சேர்ந்த டாக்டர் பரமேஸ்வரனின் முழு ஒத்துழைப்பும் கிடைத்தது. கலெக்டர் ராஜன் விரைந்து செயல்பட்டார். கிராம நிர்வாக அதிகாரிகளிலிருந்து, மேலேயுள்ள அதிகாரிகள் வரை அனைவரையும் படுவேகமாகச் செயல்படச் செய்தார். முதலில் கல்லாதவர்கள் பற்றிய கணக்கு எடுக்கப்பட்டது. கிட்டத்தட்ட 1.70 லட்சம் பேர் எழுதப் படிக்கத் தெரியாதவர்களாக இருந்தனர். அதில் மனநிலை சரியில்லாதவர்கள், தொழில் நிமித்தம் நேரத்தை ஒதுக்க முடியாதவர்கள், குடிகாரர்கள், தவிர்த்துக் கிட்டத்தட்ட 1.61 லட்சம் பேருக்கு நடைமுறைக் கல்வியறிவு புகட்டத் தீர்மானித்தார்கள்.

அரசும் பரிஷத்தும் மட்டுமே செயல்பட்டால், திட்டம் நூறு சதவீதம் வெற்றி பெற முடியாது என்பதை அனுபவ ரீதியாக உணர்ந்திருந்த கலெக்டர் ராஜன், திட்டத்தை மக்கள் இயக்கமாக மாற்றினார். எல்லா அரசியல் கட்சிகளின் பிரதிநிதிகளையும் அழைத்தார். நேரு யுவ கேந்திரா போன்ற நாற்பத்து நான்கு சேவை ஸ்தாபனங்களை அழைத்துப் பேசித் திட்டத்தை அமுல்படுத்தத் தோள்கொடுக்கச் சொன்னார். 'ஒளி ஏந்திச் செல்வோம்' என்று திட்டத்திற்குப் பொருத்தமான பெயரும் கொடுக்கப்பட்டது.

திட்டத்தைப் பற்றி மக்களிடையே எடுத்துச் சொல்ல, நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யர் தலைமையில் மக்கள் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது. திட்டத்தை எடுத்து நடத்த கலெக்டர் தலைமையில் 'கல்வியறிவுக் குழு' ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இது தவிர, ஏற்கெனவே பல்கிப் பரவியிருந்த பரிஷத்தின் உறுப்பினர்கள் திட்டத்தைச் செயல்படுத்துவதில் மும்முரமாக

அடுத்த இதழில்....

●● அரசு உத்தரவால் பெட்ரோல் மிச்சப்படுமா?

— ஓர் அலசல்

●● தங்கப் பதக்கம் பெறத் தயாராகிறார்கள்...

— ஸ்பெஷல் ரிப்போர்ட்





# தானத்தில் சிறந்தது அன்னதானம்

## ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான அறக்கட்டளை

திட்டத்திற்கு நன்கொடை வசூலிக்க

## சிட்டி யூனியன் வங்கி

அங்கீகரிக்கப் பட்டுள்ளது.

இத்திட்டத்திற்கு வழங்கும் நன்கொடை பக்தர்களுக்கு அன்னதானம் அளிக்கப் பயன்படுத்தப் படுகின்றது. இன்றே

**சிட்டி யூனியன் வங்கி**யின் மூலமாக இத்திட்டத்திற்கு நன்கொடை அளித்து ஏழுமலையானின் அருளைப் பெறுக.

* நன்கொடைகள் ரூபாய் 1000/-ம் அதன் மடங்கிலும் ஏற்றுக் கொள்ளப்படும்.
* இத்திட்டத்திற்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வருமான வரிச் சட்டம் 80 ஜி பிரிவின் கீழ் வரி விலக்கு வசதி உண்டு.

நன்கொடை அளிக்கவும், மேலும் விபரங்களுக்கும் இன்றே உங்கள் அருகாமையிலுள்ள எமது கிளையினை அணுகுங்கள்.




**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**

பதிவு அலுவலகம்: கும்பகோணம்-612 001.

CUB – உங்கள் வளர்ச்சிக்கேற்ற வங்கி.

MCS/CUB/362

இறங்கினார்கள். திட்ட அலுவலகத்தில் பணிபுரிய அரசு ஊழியர்களும் ஆர்வத்துடன் முன்வந்தனர்!

பாத யாத்திரை, தெரு நாடகங்கள், சினிமாப் படங்கள், ஊர்வலங்கள் என்று திட்டம் பற்றிப் பிரம்மாண்டமாகப் பிரசாரம் ஆரம்பமானது. இந்தப் பிரசாரத்தின் மூலம், கல்வியறிவு பெற வேண்டிய அவசியத்தை உணர்த்தியதோடு, திட்டம் வெற்றி பெற கல்வியறிவு பெற்றவர்களின் பங்கும் கணிசமாகத் தேவை என்று வலியுறுத்தப்பட்டது. விளைவு, கிட்டத்தட்ட இருபத்தைந்தாயிரம் இளைஞர்கள், பெண்கள் இந்தத் திட்டத்தில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள முன்வந்தார்கள். பரிஷத்தின் உறுப்பினர்கள் தவிர, பல்வேறு அரசியல் கட்சிகளின் தொண்டர்களும் பங்கு பெறத் தயாரானார்கள்!

கல்வியறிவு இல்லாதவர்களுக்குக் கல்வியறிவு புகட்ட வேண்டும் என்று தீர்மானித்தால் மட்டும் போதாது. அவர்களுக்கு எது போன்ற கல்வியறிவு வேண்டும்? பல்வேறு பேராசிரியர்களும் ஒன்று கூடி விவாதித்து ஒரு பாடத் திட்டத்தை உருவாக்கினார்கள். அந்த அடிப்படையில் 'அக்ஷரம்' (**Aksharam**) என்ற 72 பக்கப் புத்தகம் தயாரானது. சராசரி வாழ்க்கைக்குத் தேவையான எல்லா விஷயங்களையும் கொண்ட பாடப் புத்தகமாக அக்ஷரம் உருவானது. உதாரணமாக, கடையில் பொருட்களை வாங்கினால் எவ்வளவு பணம் கொடுக்க வேண்டும்; கடிகாரத்தில் நேரம் பார்ப்பது; காலண்டர்களில் நாள், கிழமைகளைக் கண்டுபிடிப்பது; தேசத் தலைவர்களைப் பற்றி, தேசத்தைப் பற்றி, சுகாதாரத்தைப் பற்றியெல்லாம் தெரிந்து கொள்வது என்று உபயோகமான பல விஷயங்கள் புகுத்தப்பட்டன.

இந்தப் பாடங்களைச் சொல்லித் தரத் தயாராக வந்த இளைஞர்களுக்கும், பெண்களுக்கும் பயிற்சி வகுப்புகள் நடந்தன. பயிற்சியைப் பெற்றுக் கொண்ட அவர்கள், மாவட்டத்தின் எல்லாக் கிராமங்களுக்கும் சென்று, தங்கள் பணியை ஆரம்பித்தார்கள். சரியாகச் சொன்னால், சென்ற வருடம் ஜனவரி மாதம் 26-ம் தேதி இத் திட்டம் செயல்பட ஆரம்பித்தது.

ஒரு கிராமத்தின் பொதுவான இடத்தில் வகுப்புகள் நடத்தப்பட்டன. நேரம் வசதிப்படாத போது, வீட்டுக்கே சென்றும் சொல்லித் தந்தார்கள். இப்படிப் படிக்க வந்தவர்களில் பெரும்பாலோர் வயதானவர்களே என்பதால் அவர்களுக்குப் பார்வைக் கோளாறு பிரச்னை! அதைப் போக்க முதலில் எழுபதாயிரம் பேருக்கு மூக்குக் கண்ணாடிகள் வழங்கப்பட்டன. இருப்பினும் சிலர் இந்த வயதில் வந்து படிக்கக்



* கலெக்டர் ராஜன்.

கூச்சப்பட்டார்கள். பரிஷத்தின் உறுப்பினரான குமாரி அஜிதா சொன்னார்: "என்னிடம் கல்வியறிவு பெற்ற ஒரு கணவன் — மனைவி ஜோடியை என்னால் மறக்கவே முடியாது. இரண்டு பேருக்குமே வெட்கம் அதிகம். அதுவும் சேர்ந்து படிப்பது என்பது இருவருக்கும் ஒருவித சங்கடத்தைக் கொடுத்தது. ஆனாலும் ஆர்வம் அதிகமானதால், வெட்கம் புறமுதுகிட்டது. ஒன்றுமே தெரியாமல் வந்த அவர்கள், இறுதிப் பாட வகுப்புகள் நடக்கும் போது 'வறுமை ஏன்?' என்று அலசவே ஆரம்பித்து விட்டார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!"

இந்த இளைய சமுதாயத்தினருக்கு இந்தப் பணியில் ஈடுபட எது காரணமாக இருந்தது? "கல்வியறிவு இல்லாவிட்டால் சமூக, பொருளாதார மாற்றங்களைக் கொண்டு வர முடியாது. ஏழை — பணக்காரன், உயர்ந்தவன் — தாழ்ந்தவன் என்ற நிலை மாற, எல்லோரும் கல்வியறிவு பெற்றால்தான் முடியும். எனவேதான் என்னாலான உதவியைச் செய்ய முன் வந்தேன்" என்கிறார் குமாரி வில்ஸி ஜோசப்.

பெரும்படப்பு கிராமத்தில் சுஜித் என்ற இளைஞர் பதினான்கு பேருக்குப் பாடம் எடுத்திருக்கிறார். இடது கம்யூனிஸ்ட் கட்சியின் இளைஞர் அமைப்பைச் சேர்ந்த இவர், "எங்கள் மாவட்டம் மட்டுமல்லாமல் கேரளாவில் உள்ள எல்லா மாவட்டங்களுக்கும் சென்று, இந்தப் பணியில் ஈடுபடத் தயாராக இருக்கிறேன்" என்கிறார்.

இறுதியில், இப்படிப் படித்தவர்களில் எத்தனை பேர் போதிக்கப்பட்ட பாடத்தைப் புரிந்து கொண்டு கல்வியறிவு பெற்றார்கள்? இந்தக் கேள்விக்கான பதிலைத் தெரிந்து கொள்ள, பாடங்கள் சொல்லித் தரும் பணி முடிவடைந்ததும், தேர்வு நடத்தப்பட்டது. நான்கு பக்கக் கேள்வித் தாள் கொடுக்கப்பட்டது. பதில்களைக் கேள்வித் தாளிலேயே எழுதித் தரும்படியான தேர்வு. பதில்கள் திருத்தப்பட்டதும் தெரிந்த முடிவு என்னவென்றால், கிட்டத்தட்ட ஒன்றரை லட்சம்

பேர் முழுமையான நடைமுறைக் கல்வியறிவு பெற்றுத் திட்டம் மகத்தான வெற்றி பெற்றது என்பதுதான்!

"இந்தத் திட்டத்துக்குச் சுமார் ஆறு கோடி ரூபாய் செலவாகியிருக்க வேண்டும். ஆனால் உண்மையில் செலவழிந்தது ஒரு கோடிக்கும் குறைவுதான்'' என்கிறார்கள் திட்ட உதவி அலுவலர்களான ஆர். தியாகராஜன் பொட்டியும், கே. கே. ரவியும்.

''பாடம் சொல்லித் தரும் பணியில் எந்த வித ஊதியத்தையும் எதிர்பாராமல், தங்களை முழுவதுமாக ஈடுபடுத்திக் கொண்ட இளைஞர்கள், பெண்கள் ஆகியோரால்தான் திட்டம் குறைவான செலவில், பிரம்மாண்ட வெற்றி பெற்றது என்பதில் சந்தேகமில்லை. எங்கள் திட்டம் அமுல் நடத்தப்படுவதற்கு முன்பாக, எர்ணாகுளம் மாவட்டத்தில் கல்வியறிவு பெற்றவர்கள் சுமார் 76.82 சதவீதம். ஆனால் இப்போது அது 98.5 சதவீதமாக உயர்ந்து விட்டது. இதை நாம் நூறு சதவீதமாகத்தான் எடுத்துக் கொள்ள வேண்டும். காரணம், மன நோயாளிகள், குடிகாரர்கள் போன்றவர்களை நாம் கணக்கில் சேர்க்கக் கூடாது'' என்கிறார்கள் அவர்கள்.

இந்தத் திட்டத்தின் வெற்றியைப் பார்த்து டெல்லியில் உள்ளவர்கள் அசந்து போய் விட்டார்களாம்! 'பீகாரிலும், மத்திய பிரதேசத்திலும் கல்வியறிவு பெறாதவர்கள் தொகை மிகவும் அதிகம். ஆகவே கேரள அனுபவங்கள் அந்த மாநிலங்களிலும் பயன் தரக்கூடிய வகையில், உங்கள் பணியாளர்கள் வர வேண்டும்' என்று எர்ணாகுளம் கல்விக் குழுவிடம் மத்திய அரசு வேண்டுகோள் விடுத்திருக்கிறதாம்! ''எங்களைப் பொறுத்தவரை முதலில், கேரளா முழுவதும் கல்வியறிவு பெற்றுப் பயன் பெறத்தக்க வகையில் செயல்பட வேண்டும் என்பதில்தான் குறியாக இருக்கிறோம்'' என்கிறார்கள் இந்தத் திட்ட அலுவலர்கள்.

ஆக, எந்தவொரு பிரம்மாண்டமான திட்டத்தையும் மக்களுக்கும் ஈடுபாடு உண்டாக்கிப் பங்கேற்கச் செய்வதன் மூலம் மிகச் சுலபமாக நிறைவேற்ற முடியும் என்பதற்கு எர்ணாகுளம் ஓர் எடுத்துக்காட்டாக இருக்கிறது.

— ப்ரியன்

அட்டை வண்ணப்படமும் படங்களும்:

உத்ரா

---

# டாக்டருக்கு ஒரு கேள்வி!

உங்களுக்கு தெரிந்த ஒருவர், கீழே விழுந்துவிட, தொடையில் எலும்பு முறிவு ஏற்பட்டு, செயற்கையாக எவர் ஸில்வரில் பந்துக்கிண்ணமூட்டு பொருத்துகிறார் டாக்டர். 'சில காலத்தில் எழுந்து நடமாடலாம்' என்கிறார். உங்களுக்குச் சந்தேகம். 'செயற்கை பந்துக் கிண்ண மூட்டை உடல் எப்படி ஏற்கிறது? நிராகரிப்பு இராதா? தானம் வழங்கப்பட்ட இயற்கையான சிறுநீரகத்தையே கூட உடல் நிராகரிக்கக் கூடும் என்கிறார்களே.....?' இப்படி சிந்திக்கிறீர்கள்.... விடை கிடைக்கவில்லை.

உலகக் கோப்பை கால்பந்தாட்டம் பற்றிப் படிக்கிறீர்கள். 'மருத்துவ சோதனை நடந்து, யாரும் ஸ்டீராய்ட் மருந்து காரணமாகக் கூடுதல் சக்தி பெற வில்லை என்று உறுதி செய்து கொள்ளப் பட்டது' என்று செய்தியை அறிந்து கொள்கிறீர்கள். உங்களுக்கோ சந்தேகம்.... 'ஸ்டீராய்ட் என்றால் என்ன? அதை உடலில் செலுத்துவதால் உடம்பு எவ்வாறு கூடுதல் சக்தி பெறமுடியும்? புரியவில்லை.

இவ்வாறு உங்களுக்கு மருத்துவம் பற்றியும் மருந்துகள் பற்றியும் அவ்வப்போது எழும் சந்தேகங்களைக் கேள்வியாகத் தபால் கார்டில் தலைப்புத் தந்து எழுதி அனுப்புங்கள். சுவாரஸ்யமான கேள்விகளுக்கு டாக்டர் குழுவினர் கல்கியில் விடை அளிப்பார்கள். டாக்டர்கள் தேர்ந்தெடுக்கும் கேள்விகளுக்குப் பரிசும் உண்டு!

கல்கி, ஆகஸ்டு 5 ஆண்டு மலரில் பதில்கள் இடம் பெறக் கேள்விகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 16.7.90.

அதன் பிறகும் இந்த அம்சம் கல்கியில் தொடர்வது நீங்கள் அனுப்பும் கேள்விகளின் தரத்தைப் பொறுத்தது; சுவையான பதில்களைப் பெறக் கூடிய கேள்விகள் உங்களிடமிருந்து வந்தால் இந்தப் பகுதி தொடரும்.

எங்கே, கல்கி — டாக்டர் குழுவினரின் ஆர்வத்தைத் தூண்டி விடுங்கள் பார்க்கலாம்!

— ஆசிரியர்.





தமிழன்பன்



சிவசங்கரி

## டீ.வி. கொள்கையில்

# கண்ணுக்குத் தெரியாத மாற்றமா?

ஆறு மாதங்களுக்கு முன்னர் கொப்புளித்துக் கிளம்பிய உற்சாகம் வடிந்து விட்டதைப் போலத் தோன்றுகிறது. வெளித் தயாரிப்பாளர்களின் திறமைகளைக் காண்பது அரிதாகி வருகிறது.

அண்மைக் காலமாக, நாட்டு நடப்புகள் பற்றி இடம்பெறுபவை எல்லாமே தூர்தர்ஷனின் சொந்தத் தயாரிப்புக்களாகவே உள்ளன. கொஞ்சமும் **Professional approach** இல்லாத தயாரிப்புகள். இதே ரீதியில் போனால் விரைவில் அரசாங்க கெஜட்டுகளைப் போல அவை ஆகி விடக் கூடும்.

கொள்கையளவில் கண்ணுக்குத் தெரியாத மாற்றங்கள் ஏற்பட்டு வருவதைப் போலத் தோன்றுகிறது. கதவுகளைத் திறக்கத் தொடங்கியவர்கள் சட்டென்று எதனால் எண்ணத்தை மாற்றிக் கொள்ளத் தொடங்கியிருக்கிறார்கள்?

'பூண்ட் பூண்ட்' தொடர் முடிவு பெற்று, தேசிய ஒளிபரப்பில் அதன் இடத்தை 'ஜானகி ஜாஸூஸ்' பெற்றுள்ளது. முந்தியதை முழுவதுமாகப் பார்த்து முடித்த போது, உண்மையிலேயே இயல்பாகச் சித்திரிக்கப்பட்ட நிகழ்ச்சிகளைக் கண்டு மகிழ்ந்த மன நிறைவு ஏற்பட்டது. இப்போது ஒளிபரப்பாகும் 'ஜானகி ஜாஸூஸ்' பற்றி என்ன சொல்ல? மிக மிகச் சுமாரான துப்பறியும் கதைத் தொடர். அதன் கதாநாயகிக்கு முறையாக வசனங்களை ஒப்புவிக்கக் கூடத் தெரியவில்லை! பளிச்சிடுபவர்: பேண்ட், ஷர்ட் அணிந்த துரியோதனன்.''

பெட்ரோல் பங்குகள் ஞாயிற்றுக் கிழமைகளில் மூடப்படுவதைப் பற்றிச் 'செய்தி விமர்சன'த்தில் ஒரு பேட்டி. அளித்தவர்: எரிபொருள் சேமிப்பு சம்பந்தப்பட்ட துறையைச் சேர்ந்தவர். இப்போது செலவாகும் எரிபொருளின் அளவு, வருங் காலத்தில் இது அதிகரிக்கக்கூடிய அளவு, அந்நியச் செலாவணியில் உள்ள நெருக்கடி நிலை, எரிபொருள் சேமிப்பின் அவசியம் என்று அரசு அறிக்கையில் காணப்பட்ட விவரங்களையே பதில்களாகக் கூறினார்.

''பெட்ரோல் விற்பனை நிலையங்களுக்கு ஞாயிற்றுக் கிழமைகளில் விடுமுறை அளிப்பது எரிபொருள் சேமிப்புக்கு எப்படி உதவக்கூடும்? சனிக்கிழமையன்றே மறு நாளுக்குத் தேவைப்படும் பெட்ரோலை நிரப்பிக் கொண்டு விடுவார்களே!'' என்றொரு கேள்வி.

ம்கூம். மனிதர் அரசு அறிக்கையைச் சுற்றிச் சுற்றி வந்தாரே தவிர, கடைசி வரை இதற்குப் பதில் அளிக்கவேயில்லை.

'செய்ஷெல்ஸ்' தீவுகளைப் பற்றிய ஒரு துண்டுப் படம். தயாரிப்பு சென்னை தூர்தர்ஷன் நிலையம். 'நமது நிலையப் படப்பிடிப்புக் குழுவினர் நேரில் சென்று பிடித்து வந்த படம்' என்று அறிவித்தார்கள். அந் நாட்டு மக்களைப் பற்றியோ, வாழ்க்கை முறைகளைப் பற்றியோ முழுமையாகத் தெரிந்து கொள்ள முடியவில்லை. ஏதோ அங்கொன்றும் இங்கொன்றுமாகத் துண்டுத் துண்டாக விவரங்கள். என்றாலும், பின்னணி உரை பிரமாதம். அழகான கவிதை நடையில் எழுதித் தமக்கே உரிய சுத்தமான உச்சரிப்புடன் விளக்கமளித்தார் தமிழன்பன்.

ஒரு பெண்ணின் வாழ்க்கைப் போராட்டத்தை விறுவிறுப்பாக எடுத்துக் காட்டியது ஒரு ஞாயிறு மாலை ஒளிபரப்பான 'பெருமை' திரைப்படம். கதை: சிவசங்கரி. கதையே அதன் உச்சகட்டத்தில் தான். மகளின் திருமணத்துக்குப் பல ஆண்டுகளுக்கு முன்னரே உதறித் தள்ளி விட்ட கணவன் வந்து நிற்க வேண்டிய கட்டாயம். வருவதற்கு அவன் விதித்த விரசமான நிபந்தனையை மனைவி ஏற்க முடியாத நிலையில், பூவையும் பொட்டையும் தவிர்த்து வெண்ணிற ஆடை அணிந்து, ''இந்த புவனா ஒரு கேள்விக் குறியல்ல. ஒரு முற்றுப் புள்ளி'' என்று கூறி மணமேடைக்கு வந்து நின்றது ஒரு துணிச்சலான முடிவு. நியாயப்படுத்தி வசனம் எழுதி வெற்றி கண்டுள்ளவர்: வியட்நாம் வீடு சுந்தரம்.

— கிச்சாமி


தமிழகம் வந்துள்ள ஈழத் தமிழர் மீது கெடுபிடி
குதிரை தப்பிச்சுப் போனா என்ன? சேணம் - லகான் பத்திர- மாத்தான் இருக்கே... லாயத்தைக் கூடப் பூட்டிட்டேன்!


கொடும்பாதகக் கொலைகளைச் செய்த விடுதலைப் புலிகள்


வி.பி.சிங்


புதிய தொழில் கொள்கை
அடடா, என்ன அழகு நம்ம மாஸ்டரின் ஆர்ட்!
அஜித் சிங்


படமா இது? சகிக்கலை!
சந்திரசேகர்


நான் என்னத்தைச் சொல்றது? இது தேவலை நல்லா இல்லாம இருந்தாலும் இருக்கலாம்!
பெர்னாண்டஸ்




ம.பொ.சி.
85-வது பிறந்த நாள் விழா




நகரு, நகரு... நானும் கொஞ்சம் இழுக்க வருகிறேன்!



# கல்கி

1990 ஜூலை 8
மலர் : 48 இதழ் 49
பிரமோதூத ஆனி 24



## வேலை பெறும் அடிப்படை உரிமை!

வேலை பெறுவதை அடிப்படை உரிமையாக்க விரும்புகிற தேசிய முன்னணி அரசு, திட்டக் குழுவை இதற்சேற்பச் சிந்திக்குமாறு தூண்டியிருக்கிறது. எட்டாவது திட்டத்தின் போது வேலை வாய்ப்பை ஆண்டொன்றுக்கு மூன்று சதவீதம் என்ற கணக்கில் அதிகரித்துவிட யோசனை செய்கிறது திட்டக்குழு. வேலை தேடுவோர் தொகை ஆண்டொன்றுக்கு இரண்டரை சதம் அதிகரிக்கும் என்று எதிர்பார்க்கப்படுவதால் இந்தக் குறியீடு ஏற்கெனவே வேலை இல்லாதவர்களுக்கும் வேலை பெற்றுத் தந்துவிடும் என்று கருதுகிறார்கள் போலும்!

சதவீதக் கணக்குகளை மேம்போக்காகப் பார்க்க, 'பிரமாதமான சிந்தனை, எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்தன' என்று தோன்றும். ஆனால் நடைமுறைப் படுத்துவது என்பது சுலப சாத்தியமல்ல. திட்ட ஒதுக்கீட்டில் ஐம்பது சதவீதம் கிராமப்புற அபிவிருத்திக்குச் செலவிடப்படும் என்ற தீர்மானமும்கூட வேலையில்லாக் கொடுமையை ஒழித்துக் கட்டிவிடும் என்று கூற முடியாது.

இன்றைக்குள்ள இருபத்திரண்டே கால் கோடி தொழிலாளர்களில் இரண்டே கால் கோடி பேர்தான் ஊழியர்கள் என்ற முறையில் வேலை செய்கிறார்கள். இவர்களிலும் சரிபாதிக்குமேல் அரசு ஊழியர்கள். பாக்கிப் பேரெல்லாம் அன்றாடங் காய்ச்சி வகையறாதான். இன்று வேலை கிடைத்தால் சோறு; இல்லா விட்டால் பட்டினி. சுதந்திரம் பெற்று 43 ஆண்டுகளில் இந்த நிலையில் பிரமாதமாக மாற்றம் ஏதுமில்லை.

காரணம் என்ன? நமது திட்டங்களை வகுப்பவர் எவருமே மக்கட் செல்வத்தை அடிப்படையாகக் கொண்டு திட்டம் போடவில்லை. எல்லாம் ரூபாய் அடிப்படையிலான திட்டங்களாகவே உள்ளன. பட்ஜெட் மூலம் அரசுக்கு இத்தனை வரி வருமானம் வருகிறது: அதிலிருந்து இந்தத் துறைக்கு இவ்வளவு; அந்தத் துறைக்கு அவ்வளவு என்று பங்கு பிரிக்கிறார்கள். இந்த அடிப்படையே மாற வேண்டும். நம்மிடம் வேலை செய்யக் கூடிய திடகாத்திரமான மனிதர்கள் இத்தனை பேர் இருக்கிறார்கள். இவர்களை ஆற்றலுக்கு ஏற்பப் பிரிப்போம். அவரவர் திறமைக்கு ஏற்பப் பயிற்சி தருவோம். வேலை வாய்ப்புக்களை உருவாக்கித் தருவோம் என்ற ரீதியில் சிந்தித்துச் செயல்பட வேண்டும். போக்குவரத்து, கட்டுமானப் பணி போன்ற வேலை வாய்ப்புக்கள் அதிகமாக உள்ள துறைகளை ஊக்குவிக்க வேண்டும்.

பல ஆயிரம் கோடி ரூபாய்களை அரசுத் துறைகளில் முடக்கி நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறது அரசு. இதிலென்ன பெருமை? லாபமோ, நஷ்டமோ தனியார் துறை அனுபவித்துவிட்டுப் போகட்டும் என்று தொழில் துறையைத் தனியாரிடமே விட்டுவிடலாம். வேலை வாய்ப்புக்கள் பெருகுமாறு தொழில் துறை செயல்படுகிறதா என்று அரசு கண்காணித்து வந்தால் போதும்.

தேவையற்ற விஷயங்களை அரசு இழுத்துப் போட்டுக் கொள்ளாமல், சாலைகள், மின் உற்பத்தி, சுகாதாரம் போன்ற அடிப்படைத் தேவைகளில் கவனம் செலுத்தலாம். இந்த அடிப்படைத் தேவைகளில் எல்லாம் தலையாயது கல்வி. அதுவும் இன்றைய ஏட்டுக் கல்வி அல்ல. மக்களின் வாழ்க்கைக்குப் பயன்படக் கூடிய, வேலை வாய்ப்பைப் பெற்றுத் தரக் கூடிய கல்வி. வேலை என்றால் மேஜைமுன் அமர்ந்து நாற்காலி தேய்ப்பதுதான் என்ற மனப்பான்மையை இந்தக் கல்வி மாற்ற வேண்டும். இதில் அரசு கவனம் செலுத்தினால் ஆடியோ, வீடியோ உபகரணங்களைப் பயன்படுத்தி அற்புதங்களைச் சாதிக்கலாம். தனியார் துறையையும் இதில் போட்டியிட அனுமதித்து ஊக்குவிக்கலாம். இதற்காக ஆசிரியர்களை உருவாக்கி நியமிப்பதிலும், பள்ளிகள் கட்டுவதிலும், உபகரணங்கள் தயாரிப்பதிலும் உடனடியாக ஏராள வேலை வாய்ப்புக்கள் பெருகும். மேலும், திருத்தி அமைக்கப் பட்ட கல்வியைப் பெற்று வருகிறவர்கள் வேலையில்லாப் பட்டதாரிகளாகத் திண்டாட மாட்டார்கள். பள்ளியை விட்டு வெளியே வரும்போதே உழைத்துச் சம்பாதிக்க என்ன வழி என்பது அவனுக்குப் புரிந்து போயிருக்கும். வேலையும் ஊதியமும் தனக்காகக் காத்திராவிட்டால் அவன் தனக்குத் தானே வேலை கொடுத்துக் கொள்வான்!

இதையெல்லாம் செய்யாமல், வேலை பெறுவதை ஓர் அடிப்படை உரிமையாக்கி, சட்டம் மட்டும் இயற்றி விட்டால் போதாது. அது வேலையற்றோருக்கு அரசு நஷ்ட ஈடு தருவதில் மட்டுமே முடியும். மக்களின் வரிப் பணம் மேலும் மேலும் விரயமாகும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# ஹலாசனம்



ஆரோக்கிய ரகசியம்:
வி. என். குமாரசாமி

'ஹல்' என்றால் கலப்பை என்று அர்த்தம். ஹலாசனம் என்றால் கலப்பை போன்ற நிலையில் இருக்கும் ஆசனம். வாழ்க்கை என்ற நிலத்தில் ஹலாசனம் என்ற கலப்பையால் உழுதால் ஆரோக்கியப் பயிர் விளையும்.

மிருதுவான விரிப்பில் மல்லாந்து படுத்துக் கொள்ளவும். கைகளைப் பக்கத்தில் உடலை ஒட்டினாற்போல் நீட்டி வைக்கவும். உள்ளங்கைகள் தரையில் படிய வேண்டும். இரு கால்களும் இணைந்து அருகருகே இருக்க வேண்டும். இரு கால்களும் கைகளும் விரைப்பாய்இருக்க,உள்ளங்கைகளைத்தரையில் நன்றாக ஊன்றி, மூச்சைப் பிடித்து, இரு கால்களையும் சேர்ந்தாற்போல் தூக்கி, தலைக்குப் பின்புறம் கால் விரல்களைத் தரையில் ஒட்ட வைக்கவும். அப்படியே 2 — 3 வினாடிகள் இருந்து,மெதுவாகக்கால்களைத் தூக்கி, மெல்ல இறக்கி முன்னிருந்த நிலைக்கு வரவும்.

கால்களைத் தூக்கும் முன் மூச்சை வெளியேற்ற வேண்டும். கால்கள் நேர் நிலைக்கு முன்னுக்கு வரும்போது மூச்சு இழுக்க வேண்டும். மேலிருந்து இறங்கித் தரையைத் தொட வரும்போது மூச்சை வெளியேற்ற வேண்டும். சில நாள் இதை ஞாபகம் வைத்துப் பழகினால் பிறகு தன்னால் செய்ய வரும்.

சிலருக்கு இரண்டு கால்களையும் சேர்த்தாற்போல் தூக்க வராது. அப்படித் தூக்கும் போது தலையும் தூக்கும். சிலருக்குக் கை விரல்களை விரித்து, விகாரமாய்நெட்டக்குத்தலாக வைத்து ஊன்றினால்தான் கால்களைத் தூக்க வரும். சிலருக்குக் கால்கள் நடுங்க ஆரம்பிக்கும். அப்படியே கால்களைத் தூக்குவதில் வெற்றி கண்டாலும் பின்புறம் போய் எட்ட முடியாது. பிருஷ்டம், இடுப்பு முதலியன தரையை விட்டு எழும்பாது.

''சரி, இதற்கும் நமக்கும் ஸ்நானப் பிராப்தி கூடக் கிடையாது; நமக்கெல்லாம் எங்கே வரப் போகிறது?'' என்று விட்டுவிடுவார்கள். எதைச் செய்ய வேண்டுமானாலும் எடுத்ததும் சரியாகச் செய்ய வராது. சற்றுப் பொறுமையாகப் பழகினால் படிப்படியாக வரும். சில நாட்கள் என்ன, சில மாதங்கள் கூட ஆகட்டுமே, பரவாயில்லை. விடா முயற்சியுடன் செய்தால் இறுதி வெற்றி உறுதி. செய்ய முடிந்த வரை உடலுக்குப் பயன் உண்டு.

நடக்கப் பயிலும் குழந்தையைப் பாருங்கள். பிடித்துக் கொண்டு நிற்கிறது. பிடித்துக் கொண்டு நடக்கிறது. பிறகு தானே நடக்கப் பார்க்கிறது. பொத்தென்று உட்கார்ந்து விடுகிறது. சோர்ந்து போகிறதா? இல்லையே! மறுபடி மறுபடி முயற்சி செய்து வெற்றி அடைகிறது. குழந்தைக்கு இருக்கிற ஊக்கம் நமக்கு இருக்க வேண்டாமா? குழந்தையைப் போலவே நாமும் படிப்படியாக ஹலாசனம் பழகலாம். எப்படி?

முதலில் கால்களைச் சேர்த்தாற்போல் எழுப்பி ஆங்கில எழுத்தான L வடிவத்துக்கு உடலைக் கொண்டு வரவும். அதாவது இடுப்பும் பிருஷ்டமும் தரையுடன் படிமானமாய் இருக்க, கால்களை மட்டும் செங்குத்தாக உயர்த்துவது. பிறகு கால்களைப் பிரிக்காமல் மெதுவாகக் கீழிறக்கித் தரைக்கு ஒட்டினாற் போல் கொண்டு வரவும். ஆனால் தரையைத் தொடக் கூடாது. ஓரிரண்டு அங்குலம் சந்து இருக்கும்போதே அப்படியே மறுபடி கால்களைத் தூக்கி 'எல்' வடிவ நிலைக்குக் கொண்டு வரவும். பிறகு நிதானமாய்க் கீழிறக்க வேண்டும். இம்மாதிரியே தரையைக் கால் தொடாமல் அவரவர் சக்திக்கு ஏற்ப மூன்று முதல் ஆறுதடவை வரை செய்து பழகலாம்.

இப்படி பழகும் சமயம், கால்கள் தரையை நோக்கி வரும்போது சிலர் பொத்தென்று போட்டு விடுவார்கள். ஓரிரண்டு அங்குலம் வரை வந்து அப்படியே தூக்கச் சக்தி இருக்காது. வேறு சிலர் ஓரிரண்டு அங்குலம்தான் சந்து இருக்கும் என்று எண்ணிக் கொண்டு அரை அடி இருக்கும் போதே தூக்கி விடுவார்கள். இக்குறைகள் எல்லாம் கவனம் வைத்துப் பழகினால் சில நாளில் மறைந்து விடும். சக்தி இல்லாதவர்கள் ஒவ்வொரு தடவையும் கால்களைத் தரையில் வைத்து 3 — 4 வினாடி இளைப்பாறி, பிறகு தூக்

●● சேமிப்பு இல்லாத குடும்பம் கூரை இல்லாத வீடு!

— கட்டபொம்மன் போக்குவரத்துக் கழகப் பேருந்து ஒன்றில் படித்தவர்:

— கு. அருணாசலம்

கலாம். ஆனால் சில நாளிலேயே கீழே வைக்காமல் தூக்கப் பழக வேண்டும்.

இம்மாதிரி ஓரிரண்டு மாதங்கள் பழகி வந்தால் இடுப்புக்குச் சக்தி ஏற்படும். துடைகள் வலு வடையும். நரம்புகள் பலப்படும். பிறகு கால்களை இன்னும் எவ்வளவு உயர்த்தி, பின்னுக்குக் கொண்டு போக முடியுமோ அவ்வளவு தூரம் கொண்டு போய் மறுபடி தரைக்கு வர வேண்டும். ஆனால் தரையில் ஒட்டாமலேயே கால்களை எழுப்பி மறுபடி முன் சொன்ன படி செய்ய வேண்டும். இந்த இரண்டாவது கட்டப் பயிற்சியின் போது பிருஷ்டமும் இடுப்பும் கூட தரையிலிருந்து உயர்வதை உணர்வீர்கள். இம்மாதிரி ஒரு மாதம் பழகி வந்தால் முதுகுச் சதைகள், நரம்புகள் பிடிப்பு விட்டு மடக்கவும் நீட்டவும் சக்தி பெறும். அப்புறம் லேசாய்த் தலைக்குப் பின் கால்களை இறக்கித் தரையைத் தொடலாம்.

அப்படியும் சிலருக்கு உடனே தரையைக் கால்களால் தொடவராது. நாலு அங்குலம் அல்லது இரண்டு அங்குலம் இடைவெளி இருக்கும் போதே நின்று விடும். இவர்கள் ஒவ்வொரு காலாக மாற்றி மாற்றி இறக்கித் தரையைத் தொட்டுப் பழகி வந்தால், சில நாளில் இரு கால்களாலும் சேர்ந்தாற்போல் தொட வரும்.

ஹலாசனம் சரியாகச் செய்ய வராத தற்குக் காரணம், முதுகெலும்புகள் விரைப்பாய் இருப்பது மட்டுமல்ல. வயிறு பருத்துப் போயிருப்பதும் ஒரு காரணம். புஜங்காசனம், சலபாசனம், தனுராசனம், பஸ்கிமோத்தானாசனம் முதலியவைகளைப் பழகினால் வயிறு கரைந்து, இளகி, ஹலாசனம் செய்ய வரும். எடுத்ததும் புதிதாக ஹலாசனம் செய்யக்கூடாது. ஆசனங்களை இத் தொடரில் பிரசுரமாகும் வரிசைப்படி செய்து வருவதே நல்லது. ஒரு ஆசனத்தைப் பழகி முற்றிலுமாக வெற்றி கண்ட பிறகு தான் அடுத்த ஆசனத்துக்குப் போக வேண்டும் என்பதும் இல்லை. வரிசை மாறாமல் ஒவ்வொரு ஆசனத்தையும் முடிந்த வரை செய்து வரலாம். படிப்படியாக ஒவ்வொன்றிலும் முன்னேறலாம். தேர்ச்சி பெறலாம்.

வழக்கமாக ஆசனம் செய்து வரும் சகோதரிகள் கருவுற்றால், ஹலாசனம் இரண்டு மாதம் வரை செய்யலாம். அப்புறம் கூடாது. கருவுற்றவர்கள் புதிதாக எந்த ஆசனமுமே பழக ஆரம்பிக்கக் கூடாது.

ஹலாசனத்தினால் ஏற்படும் நற்பயன்கள் கொஞ்ச நஞ்சமல்ல. அவற்றை விரிவாக அடுத்த இதழில் கூறுகிறேன்.

(தொடரும்)

**படத்தில்: சதீந்திரன்**

**படங்கள்: உத்ரா**



# தேர்தல் கமிஷனுக்கு மேனகா காந்தி கடிதம்!

அண்மையில், மேனகா காந்தி, ''அங்கீகரிக்கப்பட்ட தேர்தல் சின்னங்களிலிருந்து மிருகங்கள், பறவைகளை நீக்க வேண்டும்'' என்று தேர்தல் கமிஷனுக்குக் கடிதம் எழுதியுள்ளார். இவர் பிராணிகள் நலனில் கொண்டுள்ள அக்கறை அனைவரும் அறிந்ததே. ''தேர்தல் நேரத்தில், சின்னமாய்த் தரப்படும் பிராணிகளும், பறவைகளும் வேட்பாளர்களாலும், ஆதரவாளர்களாலும் துன்புறுத்தப்படுகின்றன'' என்கிறார் மேனகா. இது உண்மைதான். தமிழகச் சட்டமன்றத் தேர்தலில் சேவல்களும், புறாக்களும் பட்ட பாட்டை நாம் காணவில்லையா?

மேனகா காந்தி, கடிதத்தில் கேட்டுக் கொண்டதற்கு ஏற்ப, கமிஷன் கடிதத்தில் ... 

மேனகா காந்தி, கடிதத்தில் கேட்டுக் கொண்டதற்கு ஏற்ப, கவேச்சைகளுக்கான மிருக—பறவைச் சின்னங்களைத் தடை செய்து விடுவதாய்த் தேர்தல் கமிஷன் முடிவெடுத்திருக்கிறது. ஆனால் அங்கீகரிக்கப்பட்ட அரசியல் கட்சிகள் பதினான்கு இத்தகைய சின்னங்களைப் பயன்படுத்தி வருகின்றன. தேர்தல் கமிஷன், இந்தக் கட்சிகளின் விஷயத்தில் தன்னிச்சையாய் முடிவெடுக்க இயலாது. சம்பந்தப்பட்ட கட்சிகளுக்கு, 'வேறு சின்னத்தை ஏற்றுக் கொள்ளுகிறீர்களா?' என்று கேட்டுக் கடிதம் எழுதியது. ஆனால், பதினான்கு கட்சிகளுமே, மக்களுக்குப் பரிச்சயமாகிவிட்ட தங்கள் கட்சியின் சின்னத்தை மாற்றிக் கொள்ளத் தயாராயில்லை. மிருகங்களை அல்லது பறவைகளைப் பிரசாரத்தின் போது துன்புறுத்துவதில்லை என்று சம்பந்தப்பட்ட கட்சித் தலைமையும் தொண்டர்களும் தாங்களே ஒரு சுயக் கட்டுப்பாடு ஏற்படுத்திக் கொண்டால்தான் உண்டு!

— ஜூலி





●● மக்களின் ரசனையை உயர்த்துவதை விட, தாழ்த்துவது மிக எளிது. இப்போது கொடுத்துக் கொண்டிருப்பது போலவே, அங்கிருந்தும் இங்கிருந்துமாக எடுத்து 'ஒட்டுப்போட்ட' இசையைக் கொடுத்தால், வேறு எதையும் அவர்கள் ரசிக்க முடியாது. அதே சமயம் நம்முடைய ராகங்களின் அடிப்படையில் அமைந்த இசையை வழங்கினால், அதே மக்கள் தொடர்ந்து நல்ல இசையை ரசிப்பார்கள்.

— திரை இசை அமைப்பாளர் நௌஷாத்.




●● விடுதலை பெற்ற பிறகு, வருடத்துக்கு 200 கி.மீ. ரயில் பாதையே நம்மால் போட முடிந்தது என்பது வெட்கத்துக்குரிய விஷயம். பிரிட்டிஷ்காரர்கள் வருடத்துக்கு 1000 கி.மீ. பாதை போட்டார்கள்.

— ஜார்ஜ் பெர்னாண்டஸ்.



●● தமிழ்நாடும் பஞ்சாப்-காஷ்மீர் மாதிரி ஆகிவருகிறது என்று எதிர்க்கட்சியினர் சொல்லி, மக்களைப் பீதியடையச் செய்யக் கூடாது. நிலைமை பயங்கரமாகத்தான் இருக்கிறது. ஆனால் அதற்கு அரசியல் சாயம் பூசுவது கூடாது.

— ஜனதா தளத் தலைவர் பொம்மை.

●● திராவிடர் இயக்கத்தை அழிக்க ஆர். எஸ். எஸ்.ஸும், அவர்களைச் சார்ந்தவர்களும் திட்டமிட்டு வருகிறார்கள். இந்தத் திட்டங்கள் எல்லாம் பத்திரிகை அலுவலகங்கள் சிலவற்றில்தான் நடைபெறுகின்றன.

— முதல்வர் கருணாநிதி.

●● விடுதலைப் புலிகளுடன் தமக்கு உள்ள தொடர்பை மறைத்து, மாநிலத்தில் சட்டம் ஒழுங்கைப் பராமரிக்க இயலாத போது, மக்களைத் திசை திருப்ப, ஆர். எஸ். எஸ். மீது பழிசுமத்துகிறார் முதல்வர்.

— வி. ரங்கசாமி தேவர்,
ஆர். எஸ். எஸ். மாநிலத் தலைவர்.

●● 'எம். ஜி. ஆர் அரசு விடுதலைப் புலிகளுக்கு நான்கு கோடி ரூபாய் கொடுக்கலையா?' என்கிறார் கருணாநிதி. ஆமாம், கொடுத்தோம், அதுக்கென்ன இப்போ? அப்போ நான்தான் நிதியமைச்சர். நான்தான் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தேன். தெரிந்து கொடுத்தது நான்கு கோடி. தெரியாமல் கொடுத்தது எவ்வளவோ! தம் சொந்தப் பணத்தில் கூடப் புரட்சித்தலைவர் எத்தனையோ கோடி அள்ளிக் கொடுத்தார்!

— நெடுஞ்செழியன்.

●● 'வன்முறை நன்முறையும் இல்லை; அது நம்முறையும் இல்லை' என்று கூறியவர் அண்ணா. அவர் வழியைப் பின் பற்றுவதாகத் தி. மு. க. பெருமை பேசுகிறதே தவிர, பின்பற்றவில்லை.

— குமரி அனந்தன்.

●● வழியில் நடந்து செல்லும் போது காலில் நெருஞ்சிமுள் குத்திவிட்டால், அதை எடுத்துத் தூர எறிந்து விட்டுச் செல்வோமே தவிர, அதை அங்கேயே போட்டு விட்டுப் பின்னால் வருபவர்கள் பாதிக்கக் கூடிய அளவில் செல்லமாட்டோம்.

— கருணாநிதி.

●● தமிழ் நாட்டிலுள்ள பல ஊராட்சிகளில் வரவு-செலவுக் கணக்குகள் சரியாக இல்லை என்பதை வேதனையுடன் குறிப்பிட வேண்டியிருக்கிறது.

— உள்ளாட்சித் துறை அமைச்சர்,
கோ.சி. மணி.

தொகுப்பு: எஸ். வி. என்.

## ஆரம்பம் எப்போது?

* டெலிவிஷனில் ராமாயணத்தை அடுத்து மஹாபாரதம் வந்ததைப் போல், கல்கியில் 'பொன்னியின் செல்வனை'த் தொடர்ந்து 'சிவகாமியின் சபதம்' வரவிருப்பது ஆனந்தமளிக்கிறது!

கோவை, உமார்த்தி.

* அமரர் கல்கியின் 'சிவகாமியின் சபதம்' காலத்தால் அழியாத கலங்கரை விளக்கம்; அந்த விளக்கத்தின் ஏடுகளை ஆவலோடு புரட்ட, ஆகஸ்டு — 5 ஆண்டு மலருக்காக இப்போதிருந்தே கண்களும், கைகளும் ஏங்க ஆரம்பித்து விட்டன!

மேல்பட்டி, எம்.வி. வெங்கடேஸ்வரன்.

* அமரர் கல்கியின் 'சிவகாமியின் சபதம்' வெளியாகப் போகிறது என்ற அறிவிப்பால் இனி வீட்டில், 'யார் முதலில் படிப்பது' என்று ஒரு கல்கியை வைத்துக் கொண்டு ஆளுக்கு ஆள் அடித்துக் கொள்ளப்போவது சர்வ நிச்சயம்.

திருச்சி — 4, தாயு. ஆண்டாள்.

* அமரர் கல்கியின் 'சிவகாமியின் சபதம்' கல்கியில் மீண்டும் வெளிவரப் போகிறது என்ற அறிவிப்பைப் பார்த்துப் பேரானந்தம் அடைந்துள்ளோம். அதே நேரத்தில் இதுவரை கல்கி வாசகர்களுடன் பழகி வந்த ஆழ்வார்க்கடியான், வந்தியத்தேவன், குந்தவை, பொன்னியின் செல்வர், சின்னப் பழுவேட்டரையர் முதலானோரைப் பிரிய வேண்டி நேரிடுகிறதே என்பதை எண்ணினால் வேதனையாகவும் உள்ளது!

அறந்தாங்கி, கோ. வீரராகவன்.

* 'சிவகாமியின் சபதம்' ஆரம்பமாகப் போகிறது என்ற வண்ண அறிவிப்பு என்னை எல்லையில்லா மகிழ்ச்சியில் ஆழ்த்தியது. அமரர் கல்கியின் கலையழகு மிளிரும் அற்புதமான சரித்திரப் பொக்கிஷமான 'சிவகாமியின் சபதம்' மணியம் செல்வனின் வண்ண ஓவியங்களுடன் அசரவைக்கப் போவதை நினைத்தால் ஒரே குதூகலமாக இருக்கிறது.

முடிகண்டநல்லூர், க. ராஜேந்திரன்.

* கல்கி ஆகஸ்ட் 5 ஆண்டு மலரிலிருந்து அமரர் கல்கியின் ''சிவகாமியின் சபதம்'' வரலாற்றுத் தொடர் இடம் பெறும் என்பது இதுவரை இக்கதையைப் படித்திருக்க வாய்ப்புக் கிடைக்காத என்னைப் போன்ற இளைய தலைமுறையினருக்குப் பெருமகிழ்ச்சியூட்டும் செய்தி!

மதுரை — 9, ஜி.எம். ஜனார்தனன்.

* 'சலங்.... சலங்.... கலீர்.... கலீர்!' இதென்ன சலங்கைகளின் ஒலி? 'க்னிங்.... க்னிங்... ஙங்!' இதென்ன உளியும் கல்லும் உறவாடும் ஓசை? ஓ.... சிவகாமியின் சலங்கை ஒலியும், ஆயனச் சிற்பியின் அற்புதம் படைக்கும் கை உளி ஓசையும் அல்லவா இவை! அமரர் கல்கியின் அமர காவியங்களுள் ஒன்றான ''சிவகாமியின் சபதம்'' பற்றிய அறிவிப்பைக் கண்டு ஏற்பட்ட இப்பிரமையிலிருந்து விடுபட வெகு நேரமாயிற்று!

காட்டூர், எஸ். அருள்மொழி.

* அமரர் கல்கியின் 'சிவகாமியின் சபதம்' ஆரம்பம் என்ற முழுப்பக்க அறிவிப்பைப் பார்த்தவுடனேயே மனது புளகாங்கிதமடைந்தது. இந்தக் கதையைப் பற்றி என் அம்மா என்னுடைய சிறிய வயதில் நிறையச் சொல்லியிருக்கிறார். அன்று காதால் கேட்டதை இன்று நானே படிக்கப் போகிறேன் என்று நினைக்கும் போது, உண்மையிலேயே மனம் சிலிர்க்கிறது. ஜூலைக்கு முன்னாடியே ஆகஸ்ட் மாதம் வந்துவிடக் கூடாதா என்று மனம் ஏங்குகிறது!

சென்னை — 28, வி. சங்கர் மற்றும் குடும்பத்தினர்.


கல்கி
ஆகஸ்டு 5
ஆண்டு மலரில்
ஆரம்பம்
அமரர்
கல்கியின்
சிவகாமியின்
சபதம்



# காணாமல் போன எம்.எல்.ஏ.

இரவு மணி பதினொன்று. காலையில் வெளியே சென்ற எம். எல். ஏ. தினேஷ்வர்லால் இன்னும் வீடு திரும்பவில்லை. அவருடைய சகதர்மிணிக்குப் பயத்தால் பிளட் பிரஷர் எகிற ஆரம்பித்திருந்தது.

"அவர் இப்படியெல்லாம் ராத்திரி வெளியே தங்க மாட்டாரே? அவர் சினேகிதர்களுக்காவது போன் செய்து விசாரி வேண்டா..." என்று பதறினாள் தன் தம்பியிடம்.

"அவரோட சினேகிதர்கள் எல்லோருக்கும் போன் செய்து விசாரிச்சுட்டேன். எல்லாருமே அவர் வரலேன்னுதான் சொல்றாங்க."

அவன் பேசிக் கொண்டிருக்கும்போதே டெலிபோன் அவசரமாய்க் கனைத்தது. ரிசிவரை எடுத்தான்.

"ஹலோ... போலீஸா? யெஸ். எம். எல். ஏ.வோட மச்சினன்தான் பேசறேன். என்ன விஷயம்? சொல்லுங்க. வாட்...?" அவன் முகம் அதிர்ச்சியால் இருட்டு நிறத்துக்குத் தாவியது. ரிசிவரை வைத்து விட்டுத் திரும்பினான்.

பசு. கௌதமன்

"அக்கா, மச்சான் ஓட்டிப் போன கார் காலையிலேயிருந்து பீச்சில் அனாதையா நிற்குதாம்."

"ஐயய்யோ, அவருக்கு என்னாச்சோ தெரியலையே...!" — எம். எல். ஏ. மனைவியின் குரல் அழுகையில் வெடித்தது.

கோப்புகளில் மூழ்கியிருந்த முதல்வரின் கவனத்தைக் கலைத்தார் பி. ஏ. அவர் முகத்தில் சற்றே பதற்றம்.

"இந்தக் கடிதம் காலையில் மற்ற தபால்களுடன் வந்ததுங்க ஐயா."

முதல்வர் சலனமின்றி வாங்கிப் படித்தார். வெள்ளைத்தாளில் டைப் செய்யப்பட்ட கடிதம், 'அன்பில்லா முதல்வருக்கு' என்று ஆரம்பித்தது...

'தீவிரவாதிகள் குழுவின் வணக்கம். எதிர்க்கட்சி எம். எல். ஏ. தினேஷ்வர்லாலை நாங்கள்தான் கடத்தியிருக்கிறோம். அவர் உயிரோடு கிடைக்க வேண்டுமென்றால் சிறையில் வாடும் எங்கள் தலைவர்கள் ஐந்து பேரையும் உடனே விடுதலை செய்ய வேண்டும். இன்னும் மூன்றே நாட்களுக்குள் இந்த நிபந்தனையை நிறைவேற்றாவிட்டால் தினேஷ்வர்லாலைத் தோட்டாக்களால் துளைத்து நடுரோட்டில் வீசியெறிவோம் ஜாக்கிரதை...'

பின்குறிப்பு: இக் கடிதத்தின் நகல்கள், எல்லாச் செய்தித்தாள்களுக்கும் அனுப்பப்பட்டுள்ளன.

"இதென்ன புதுத் தலைவலி...?" என்று சலித்துக் கொண்டே முதல்வர், "கூப்பிடு டி.ஜி.பி.யை" என்றார். சில நிமிடங்களில் டி. ஜி. பி. விறைப்பான சல்யூட்டுடன் பிரசன்னமானார்.

"இந்த லெட்டரைப் பார்த்தீர்களா?"

"பார்த்தேன் சார். காணாமல் போன எம். எல். ஏ. யைக் கண்டுபிடிக்க எல்லா முயற்சிகளையும் எடுத்திருக்கோம்."

"நாளைக்குச் சட்டசபை கூடுகிறது. எதிர்க்கட்சிக்காரர்கள் என்னைக் குதறிடுவாங்க. நீங்கள் என்ன செய்வீர்களோ எனக்குத் தெரியாது... நாளைக்குச் சபை கூடுவதற்குள் தினேஷ்வர் கிடைச்சாகணும்..."

"யெஸ் சார்" என்றார் டி. ஜி. பி. நம்பிக்கையில்லாத குரலில்.

மறுநாள் எல்லாப் பத்திரிகைகளும்

'எம். எல். ஏ. கடத்தல்! தீவிரவாதிகள் கை வரிசை!' என்று தலைப்புச் செய்தியைப் பிரசவித்திருந்தன.

சட்டசபையில் அனல் பறந்தது.

"நாட்டில் தீவிரவாதிகளின் கை ஓங்கிக் கொண்டே வருகிறது. ஒரு சட்டசபை உறுப்பினருக்கே கூடப் பாதுகாப்பில்லை." — இது எதிர்க்கட்சித் தலைவரின் சாடல்.

"நீங்கள் ஆளும் கட்சியாய் இருந்த போதும் இதேபோல் கடத்தல் சம்பவம் நிகழ்ந்திருக்கிறது என்பதை என் அருமை நண்பருக்கு நினைவூட்ட விரும்புகிறேன்." — இது முதல்வரின் பதில்.

"தீவிரவாதிகள் கோரிக்கைப்படி உடனே கைதிகள் விடுதலை செய்யப்படுவார்களா? தினேஷ்வர்லாலின் உயிர் காப்பாற்றப் படுமா?"

"மன்னிக்கவும். தீவிரவாதிகளின் மிரட்டலுக்குப் பணிந்து போகும் உத்தேசம் எங்கள் அரசுக்கு இல்லை."

"கடத்தப்பட்ட எம்.எல்.ஏ.எதிர்க்கட்சிக்காரர் என்பதால் இத்தனை அலட்சியமா? இதேபோல் ஓர் ஆளும் கட்சி எம். எல். ஏ. கடத்தப்பட்டிருந்தால்...?"

ஆளும் கட்சி உறுப்பினர்கள் கூக்குரல் எழுப்பி, இந்தப் பேச்சை ஆட்சேபிக்க, கூச்சல் குழப்பம் தொடங்கி, பேப்பர் வெயிட் எறிதல், மைக் பறிப்பு, இத்யாதி நடவடிக்கைகளுடன் சபை ஒத்தி வைக்கப்பட்டது!

**எ**திர்க்கட்சித் தலைவர் தமது பண்ணைக்குச் சென்றுவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தார். திடீரென்று முக்காடு போட்ட ஓர் ஆசாமி சாலையின் குறுக்கே வந்து காரை நிறுத்தவே, அவர் திடுக்கிட்டு, பாதுகாப்புக்காக வைத்திருந்த ரிவால்வரைக் கையில் எடுத்துக் கொண்டார்.

"யார் அது?"

முக்காடு விலகியது. தலைவர் திகைப்பின் உச்சியைத் தொட்டார். காணாமல் போன தினேஷ்வர்லால்...

"தினேஷ்வர்லால்...! நீங்களா?"

"ஆமாம் தலைவரே!"

"கடத்தல்காரர்கள் உங்களை விடுதலை செய்துட்டாங்களா?"

தினேஷ்வர்லால் பெரிதாகச் சிரித்தார்.

"கடத்தலாவது, ஒண்ணாவது! எல்லாமே ஒரு செட்டப் தலைவரே!"

தலைவர் திகைப்புடன் புருவத்தை உயர்த்தினார். "செட்டப்பா? அப்படியானால்...?"

"கட்சியில எந்த முக்கியத்துவமும் கொடுக்காமல் என்னை ஒதுக்கி வச்சீங்க. அதனாலே எனக்கு பப்ளிசிடி கிடைக்கவும், அதே சமயம் நம்ம கட்சியின் செல்வாக்கு வளரவும் இப்படி ஒரு நாடகம் ஆடினேன். இப்பப் பாருங்க, ரெண்டு நாளா எல்லாப் பேப்பர்களிலேயும் என் பேர் வந்திருக்கு. நம்ம கட்சிக்கும் மவுசு கூடியிருக்கு."

"பயங்கரமான ஆளுய்யா நீர்! அடுத்து என்ன செய்யப் போறீர்?"

"பயங்கரவாதிகளிடமிருந்து நானே சாமர்த்தியமாத் தப்பி வந்துட்டேன்னு ஒரு புதுக் கதையை எடுத்து விடப் போறேன்."

"தினேஷ்வர்லால், நீங்க இப்போ திரும்பி வந்தாக் காரியம் கெட்டுப் போயிடும். நான் வேற ஒரு ஐடியா சொல்றேன். அதன்படி செய்தா உங்களுக்குத் தியாகிப் பட்டம் கிடைக்கும். அதுமட்டுமில்லே, இந்த ஒரு விஷயத்தை வச்சே ஆட்சியையே கவிழ்த்துட்டு நாம ஆட்சிக்கு வரலாம்."

"அது என்னங்க ஐடியா?" என்றார் தினேஷ்வர்லால் ஆவலுடன்.

"முதல்லே வண்டியிலே ஏறுங்க. புரியும்படி சொல்றேன்!"

தினேஷ்வர்லால் காரில் ஏறிக் கொண்டதும் கார் சீறிக் கிளம்பியது.

**ம**றுநாள் எல்லாச் செய்தித்தாள்களிலும் தினேஷ்வர்லாலின் புகைப்படத்துடன் பரபரப்பான செய்தி —

'கடத்தப்பட்ட எம். எல். ஏ. சுட்டுக் கொலை. சாலையில் உடல் அகப்பட்டது. அரசின் மெத்தனத்திற்கு எதிர்க்கட்சிகள் கடும் கண்டனம்!'

---

"தலைவருக்குக் கௌரவ டாக்டர் பட்டம் கொடுக்க முன் வந்தப்ப வேண்டாம்னுட்டாராமே?"

"எதையும் முறைப்படி செய்யணும்னு எதிர்பார்க்கிறார். 'முதல்ல கௌரவ எஸ். எஸ். எல். சி., கௌரவ பி. ஏ., எம். ஏ. வெல்லாம் கொடுங்க. அப்புறம் கௌரவ டாக்டர் பட்டம் வாங்கிக்கறேன்'னு சொல்றார்!"

— மேல்மங்கலம் பத்ரா.



# "சட்டம்–ஒழுங்கு பதுமோசமாகத்தான் இருக்கிறது!"

## — எம். எல். ஏ. கூறுகிறார்!

"சிறுமலையாறு நீர்த்தேக்கத் திட்டத்தைக் கட்டாயம் நிறைவேற்றித் தருவேன்' என்று வாக்குறுதி கொடுத்ததால்தான் எங்கள் பகுதி மக்கள் இ. காங்கிரஸைச் சேர்ந்த திருமதி. ஏ. எஸ். பொன்னம்மாளை எம். எல். ஏ. வாகத் தேர்ந்தெடுத்தார்கள். அத் திட்டம் நிறைவேறினால் சுமார் 750 ஏக்கர் நிலம் நேரடிப் பாசன வசதி பெறும்.



* நிலக்கோட்டை காவல் நிலையத் தைச் சேர்ந்த போலீஸ்காரர் ஒருவர் அதிகாரத்தோடு சாராயம் கேட்டும் காட்சி...

நீர்த்தேக்கத்தைச் சுற்றிலும் சுமார் இருபத்தைந்து கி. மீட்டர் சுற்றளவிலுள்ள கிணறுகளுக்கு நிலத்தடி நீர் கிடைக்கும். சுருக்கமாகச் சொன்னால், நிலக்கோட்டைத் தொகுதியின் முக்கால் பங்கு அத் திட்டத்தால் பயனடையும்!

"ஆனால் எங்கள் எம். எல். ஏ. ஏதும் அதற்காக முயற்சி செய்கிறாரா என்று தெரியவில்லை. நாளாக நாளாக அத் திட்டத்திற்கான மதிப்பீட்டுத் தொகைதான் அதிகரித்துக் கொண்டே போகிறது! பாருங்களேன் 64–ல் போடப்பட்ட அத் திட்டத்திற்கு அப்போதைய மதிப்பீடு 99 லட்சம் தான். பிறகு தி. மு. க. ஆட்சியில் ஏழரைக் கோடியாகி, இப்போது பத்தொன்பதரைக் கோடியாக உயர்ந்து விட்டிருக்கிறது. இந்த இழப்பு மட்டுமல்ல; இங்குள்ள பாண்டிய ராஜபுரம் சர்க்கரை ஆலைக்குத் தேவையான கரும்புகளெல்லாம் வெளியூர்களிலிருந்தே வர வேண்டியிருப்பதால் அதற்கான போக்குவரத்துச் செலவாக லட்சக் கணக்கில் வீணாகிக் கொண்டிருக்கிறது.

* நிலக்கோட்டை கோலாட்டம்மன் கோவில் வாசலில் கள்ளச் சாராயக் கடை...



* குண்டலப்பட்டி கவரிங் நகைத் தொழிலாளர்கள்: ''எங்களுக்கு ஸ்பெஷல் பர்மிட் வேண்டும்!''

சிறுமலை நீர்த்தேக்கத் திட்டம் நிறைவேறும் போது அந்த ஆலைக்குத் தேவையான கரும்புகளை எங்கள் பகுதியே வழங்கக் கூடிய வாய்ப்பு ஏற்படும். அதனால் இப் போது வீணாகிக் கொண்டிருக்கும் போக்கு வரத்துச் செலவும் மிச்சப்படும்!'' என்றார் மாவுத்தன் பட்டியைச் சேர்ந்த விவசாயி எம். சி. வெள்ளைச்சாமி.

''அவர் சொன்னது நூற்றுக்கு நூறு வாஸ்தவமான பேச்சுத்தான். நானும் அதைத்தான் வலியுறுத்திக் கொண்டிருக் கிறேன். அந்தத் திட்டத்திற்குப் பதின்மூன்று ஏக்கர் நிலம் வனப்பகுதியிலிருந்து எடுக்க வேண்டியுள்ளது. இப்போதுள்ள சட்டப்படி வனப்பகுதியிலிருந்து பதின்மூன்று ஏக்கர் நிலத்தை எடுத்தால், அதை ஈடுகட்டுவதற் காக இருபத்தாறு ஏக்கர் நிலத்தை நாம் வனத்துறைக்குக் கொடுத்தாக வேண்டும். அப்படிக் கொடுப்பதற்கான 'நிலமும் தயாராகவே இருக்கிறது. இது தொடர்பான விஷயங்கள் டெல்லியில் கிளியராக வேண் டும். அதை விரைவுபடுத்த நான் ஒரு நடை டெல்லி சென்று வரலாமென்று இருந்த போதுதான் இப்படி கார் விபத்தில் அடிபட் டுக் கிடக்கிறேன். குணமானதும் கண்டிப் பாக அதற்கான எல்லா முயற்சிகளையும் எடுப்பேன்!'' என்று உறுதியளித்தார் நிலக் கோட்டைத் தொகுதி எம். எல். ஏ. வான ஏ. எஸ். பொன்னம்மாள்.

''கொடைக்கானலிலிருக்கும் அன்னை தெரசா மகளிர் பல்கலைக் கழகம் சென் னைக்கு மாற்றப்படவுள்ளதாக அரசு தெரிவித்துள்ளது. அப்படி சென்னைக்கு மாற்றாமல் வத்தலகுண்டு பகுதியிலேயே அதைக் கொண்டு வந்தால், பின்தங்கியிருக் கும் தங்கள் தொகுதியின் முன்னேற்றத்திற் குப் பெரிதும் உதவிகரமாக இருக்குமென்று மக்கள் சொல்கிறார்களே?''

''நானும் கல்வியமைச்சரிடம் இது பற்றிப் பேசிப் பார்த்து விட்டேன். ஆனால் அரசு கேட்பதாக இல்லை. நான் மட்டும் வலியுறுத் தினால் போதுமா? எங்கள் மாவட்டத்தி லுள்ள மற்ற எம். எல். ஏ.க்களும் வலி யுறுத்த வேண்டாமா? அவர்களில் யாரும் இதுபற்றிக் கவலைப்பட்டதாகவே தெரிய



* ஏ. எஸ். பொன்னம்மாள் எம். எல். ஏ.

வில்லை.''

''பல்கலைக் கழகத்தின் நிலைதான் இப்படியென்றால், நிலக்கோட்டைத் தொகுதியில் எந்தவிதமான கல்லூரியும் இல்லாதிருப்பது மக்களை மேலும் பின் தங்கிய நிலைக்கே கொண்டு போகாதா?''

''அதனால்தான் என் தொகுதிக்கு ஒரு கலைக் கல்லூரியாவது வேண்டுமென்று கேட்டேன். கலைக் கல்லூரி வேண்டாம்; மகளிருக்கான பாலிடெக்னிக் கல்லூரி தருவதாக வாக்களித்துள்ளார்கள். இந்த ஆண்டே வந்து விடும் வாய்ப்பிருக்கிறது. இது மட்டும் போதாது ஐ. டி. ஐ. யும் வேண் டும் என்று நான் அரசாங்கத்தை வலியுறுத் திக் கொண்டிருக்கிறேன். மேலும் என் தொகுதி பின்தங்கிய தொகுதியாக இருப்ப தால் தொழிற்சாலைகளும் துவங்கப்பட் டாக வேண்டும். விவசாயக் கருவிகள் செய் யும் தொழிற்சாலையொன்றை என் தொகுதி யில் துவங்குவதாக முதல்வரே சொல்லி யிருக்கிறார். அதற்கான இடம் தேர்ந்தெடுக்

கும் வேலை நடந்து கொண்டிருக்கிறது. இவற்றோடு, என் தொகுதி விவசாயத்தையே நம்பியுள்ள தொகுதியாகையால், சிறுமலையாறு நீர்த்தேக்கத் திட்டம் மட்டும் போதாது என்று வாதாடி, பெரியாறு — வைகை மேம்பாட்டுத் திட்டமொன்றுக்காக இருபத்தைந்து கோடி ஒதுக்கப்பட்டு வேலையும் துவங்கப்படவுள்ளது. அதனால் மூவாயிரம் ஏக்கர் நிலம் பாசன வசதி பெறும். வத்தலகுண்டுக்கு அருகில் மஞ்சளாறு வாய்க்கால் பாலம் கட்டுவதற்காக வாதாடி முப்பது லட்சம் ரூபாய் ஒதுக்கச் செய்துள்ளேன். நிலக்கோட்டையில் மாவட்ட முன்சிப் கோர்ட் அமைக்க வேண்டுமென்று வாதாடி அதையும் பெற்றுள்ளேன்.''

''உங்கள் தொகுதியில் ஏராளமாக மல்லிகை பயிர் செய்யப்படுவதால், மல்லிகைப் பூவிலிருந்து செண்ட் தயாரிக்கும் தொழிற்சாலையொன்று துவங்கவும் நீங்கள் அரசை வற்புறுத்தலாமே?''

''இதுபற்றி எம். ஜி. ஆர். முதல்வராக இருந்த போதே பேசியிருக்கிறேன். அது எக்னாமிக்கலாக இல்லையென்று சொல்லி விட்டார்கள். தி. மு. க. அரசிடம் சொல்லப் போகிறேன்.''

''நிலக்கோட்டை அருகிலுள்ள குண்டலப்பட்டியில் காதுகளில் அணியும் கவரிங் நகைகள் செய்கிறார்கள். சுமார் இருபது குடும்பங்கள் இத்தொழிலைப் பரம்பரை பரம்பரையாகச் செய்து வருகிறார்கள். இத்தொழிலுக்காக அவர்கள் அனைவருக்கும் மாதம் ஒன்றுக்கு மொத்தமாகச் சுமார் நானூறுலிட்டர்மண்ணெண்ணெய்தேவைப் படுகிறது. அதற்கான பர்மிட் ஏதும் இல்லாததால் லிட்டர் ஒன்றுக்கு ரூ. 3.50 லிருந்து நான்கு ரூபாய் வரை அதிகவிலை கொடுத்து வெளியாரிடம் வாங்க வேண்டியிருப்பதாகவும், அரசே பர்மிட் கொடுத்து வழங்கினால் ரூ. 2.60க்கே கிடைக்குமென்றும் எங்களிடம் சொன்னார்கள். அதற்கு நீங்கள் ஏதும் செய்யக் கூடாதா?''

''அவர்கள் இதை என்னிடம் சொல்லவேயில்லையே! இதுவொரு பெரிய விஷயமா என்ன? சொல்லியிருந்தால் எப்போதோ ஏற்பாடு செய்திருப்பேனே?''

''உங்களிடம் சொல்வதற்கு நீங்கள் தொகுதியில் சுற்றுப்பயணம் செய்தால் தானே?''

''நீங்கள் நம்பினால் நம்புங்கள், நம்பாவிட்டாலும் போங்கள். மூன்று முறை தொகுதிப் பயணத்திற்காக ஏற்பாடு செய்தேன். மூன்று முறையும் தப்பிப் போய் விட்டது. நான்காவது முறையும் இப்படிக் கார் விபத்தில் சிக்கிக் கொண்டதால் போக முடியாமல் போய்விட்டது. அவர்கள் ஒரு கடிதாசு போட்டுத் தெரியப்படுத்தியிருந்தால் போதுமே! செய்ய மாட்டேனா? சரி, போனது போகட்டும்; நீங்கள் சொன்னதை வைத்தே அவர்களுக்கு ஸ்பெஷல் பர்மிட் வழங்கக் கலெக்டருக்கு எழுதுகிறேன்.''

''உங்கள் தொகுதியில் சட்டம்—ஒழுங்கு மிகவும் மோசமான நிலையிலிருப்பதாகச் சொல்கிறார்கள். தமது மருமகள் ஒருநாள் மாலை ஏழு மணிக்குத் தம் வீட்டு வாசலில் நின்று கொண்டிருந்த போது, ஒரு திருடன் வந்து மருமகள் கழுத்திலிருந்த சங்கிலியை அறுத்துக் கொண்டு ஓடியதாகவும் போலீஸில் புகார் செய்தும் ஒரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லையென்றும் பட்டிவீரன் பட்டியைச் சேர்ந்த தில்லை கோவிந்தன் சொன்னார்...''

''உண்மைதான். சட்டம் — ஒழுங்கு படு மோசமாகத்தான் இருக்கிறது. ஓர் எம்.எல்.ஏ. என்ன செய்ய முடியும்? அரசாங்கத்திடம் எடுத்துச் சொல்லலாம்; வாதாடலாம்... ஆனால் எதையாவது அமல்படுத்த முடியுமா? அரசாங்கம்தான் செய்ய வேண்டும். செய்தால்தானே!''

''நிலக்கோட்டையிலுள்ள கோலாட்டம்மன் கோயில் வாசலிலேயே கள்ளச் சாராயம் விற்கப்படுகிறது. அதை நாங்கள் நேரில் பார்த்துப் படமெடுத்தோம். அதில் ஒரு விசேஷம் என்னவென்றால், அந்தக் கள்ளச்சாரர்யக் கடையில் நிலக்கோட்டை போலீஸ் ஸ்டேஷனைச் சேர்ந்த ஒரு போலீஸ்காரரே குடித்துக் கொண்டிருந்தார் என்பது தான்!''

''அதை ஏன் கேட்கிறீர்கள். எல்லாப் பக்கமும் கள்ளச்சாராயம் ஆறாகத்தான் ஓடிக் கொண்டிருக்கிறது. என்னுடைய ஊரிலேயே அப்படித்தான். போலீஸில் சொன்னேன். ஏதோ நான் சொன்னேன் என்பதற்காக அவனைப் பிடித்துப் போனார்

---

'' அந்தப் பாடலாசிரியர் ஏன் ஒரு மூலையில் போய் உட்கார்ந்துக்கிட்டுப் பாட்டு எழுதுறாரு...? ''

'' அவரோட பாட்டு, மூலை முடுக்கிலே யெல்லாம் பிரபலமாகணுமாம்! ''

— ஜெயாப்ரியன்.



கள். பிறகு விட்டு விட்டார்கள்! என்னால் வேறு ஒன்றுமே செய்ய முடியவில்லை. காரணம் லஞ்சம். வேறு வழியில்லாத காரணத்தால் நான் சில ஆட்களைக் கூப்பிட்டு, கள்ளச் சாராயம் விற்பவனைப் பிடித்து வந்து உதைக்கச் சொன்னேன். வேண்டுமானால் ஊருக்கு வெளியே போய் விற்றுக் கொள்; உள்ளே வராதே என்று துரத்தியடித்தேன். வேறு ஒன்றுமே செய்ய முடியவில்லை. இதையெல்லாம் கருத்தில் கொண்டுதான் அரசே சாராயக் கடைகளைத் திறக்கப் போவதாக முதல்வர் சொல்லியிருக்கிறார்: ஆக, நல்ல சாராயமும் கிடைக்கும்; கள்ளச் சாராயமும்கிடைக்கும்என்கிறநிலை தான் வரப் போகிறது. நான் ஒரு பெண்ணாக இருப்பதால் மற்ற பெண்களின் கஷ்டங்களைப் பூரணமாகப் புரிந்து கொள்ள முடியும். அந்த வகையில் நமது தமிழக முதல்வரின் கால்களைப் பிடித்துக் கொண்டு கேட்கிறேன்... 'தயவு செய்து மதுக்கடைகளை ஒழித்துக் கட்டுங்கள். ஏழைப் பெண்களைக் கண்ணீர்க் கடலிலிருந்து காப்பாற்றுங்கள். எத்தனையோ புத்திசாலியான உங்களால், இந்தக் குடிகெடுக்கும் குடிக்கடைகளின் மூலம் கிடைக்கும் வருமானத்தை வேறு வகைகளில் பெற முடியாதா? நீங்கள் மனம் வைத்தால் நிச்சயமாக முடியும்!' ஆனால் முதல்வர் கேட்க வேண்டுமே?''

''நிலக்கோட்டை ஒரு தேர்வுநிலைப் பேரூராட்சி. அங்கு பேரூராட்சிக்குச் சொந்தமான கடைகள் ஏலமே விடப்படுவதில்லையாம். ஆண்டுதோறும் கடைகளை ஏலம் எடுத்தவர்களிடம் லஞ்சம் பெற்றுக் கொண்டு கடைகளை அவர்களுக்கே தந்து விடுகிறார்களாம். இந்நிலையில் எப்படிப் பேரூராட்சிக்கு வருமானம் கிடைக்கும்? இதில் இன்னொரு வேடிக்கை, யார் கடை வைத்திருக்கிறார்களோ, அவர்கள் ஏலம் எடுத்தவர்களாக இருக்க மாட்டார்கள். யாரோ ஒருவர் ஏலம் எடுத்து இவர்களிடம் வாடகைக்கு விட்டிருப்பார். இதுவே ஊழலை அப்பட்டமாக வெளிக்காட்டுவதாக இல்லையா? இதையெல்லாம் எதிர்த்து நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்?''

''இப்படி ஊழல் நடப்பது எனக்குத் தெரியாததல்ல! ஆனால் சம்பந்தப்பட்டவர்கள் என்னிடம் வந்து முறையிட்டு என்னோடு ஒத்துழைத்தால்தானே நான் ஊழலை நிரூபிக்க முடியும்! அதற்கு யாரும் முன்வராத நிலையில் நானும் ஊழலை வேடிக்கை பார்த்துக் கொண்டு சும்மா இருக்க வேண்டியதுதான். வேறு வழியே இல்லை.''

''உங்கள் தொகுதிக்கு வேறு என்னென்ன செய்யவுள்ளீர்கள்?''

''ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டித் தரும் திட்டத்தை அரசாங்கம் அமல் செய்து வருகிறது. நல்ல திட்டம்தான். ஆனால், என்



• நில்லைல கோவிந்தன்: ''சட்டம் — ஒழுங்குகெட்டு விட்டது!''



• எம். பி. வெள்ளைச்சாமி: ''எம்.எல்.ஏ. முயற்சி செய்கிறாரா?''

தொகுதியில் ஹரிஜனங்களை விடவும் வறுமையான நிலையில் — வறுமைக் கோட்டுக்கும் கீழே ஒரு கோடிருந்தால் அந்தக் கோட்டில் வாழ்ந்து கொண்டிருக்கும் மற்ற ஜாதிக்காரர்களும் இருக்கிறார்களே! அவர்களுக்கு ஏதாவது செய்ய வேண்டாமா? அவர்களுக்கு இலவசமாக வீடுகள் கட்டித் தர அரசால் முடியவில்லையென்றாலும் கிராமியக் கூட்டுறவு வீடு கட்டும் திட்டத்தில் கடன் கொடுத்தாவது உதவலாமே! இதைத்தான் நான் அரசாங்கத்திடம் வற்புறுத்திக் கொண்டிருக்கிறேன். அப்புறம் நீங்கள் என் தொகுதியைச் சுற்றிப் பார்த்துப் பட்டியலிட்டீர்களே, அதையெல்லாம் நான் செய்து முடித்தாக வேண்டும். என்னுடைய வீட்டுக்கு நீங்கள் வந்தபோது சாலையின் நிலையைக் கவனித்திருப்பீர்களே... என் வீட்டுக்கு வரும் சாலையே மோசமான நிலையில்தான் இருக்கிறது. என் தொகுதியிலுள்ள மற்ற சாலைகளைச் சீர்செய்து விட்டுக் கடைசியாக என் ஊருக்கு வரும் சாலையைச் சீர்படுத்தினால் போதும் என்று பொதுப் பணித்துறையினரிடமே சொல்லியிருக்கிறேன். நான் ஒன்று மட்டும் உறுதியாகச் சொல்கிறேன்... மூன்று விபத்துக்களில் அகப்பட்டும் இன்னும் நான் உயிரோடு இருப்பதற்குக் காரணமே, என் தொகுதிக்கான பணிகளைச் செய்து முடிப்பதற்காகத்தான். அப்படிச் செய்து முடிக்காமல் செத்தால் இந்தப் பொன்னம்மாளின் கட்டை வெகவே வேகாது என்பது அந்தக் கடவுளுக்கே தெரியும்!''

— இளங்கோவன்

வண்ணப்படங்களும், படங்களும்: சுபா

# “என் கண்மணியின் மிருதுவான சருமத்திற்கு நான் ஜான்ஸன்ஸ் பேபி சோப் ஒன்றையே நம்புகிறேன்.”




**வேறு எந்த சோப்பிலும்**
**ஜான்ஸன்ஸ் பேபி ஆயில் கிடையாது**

குழந்தைப் பராமரிப்பில் தலைமுறை தலைமுறையான நிறுவனம். ஜான்ஸன் அன்ட் ஜான்ஸன்

OBM/4584/TM

# அம்மாவுக்கு ஓய்வு

**அ**ம்மாவுக்கா நோய்? நம்ப முடியவில்லை யாருக்கும்!

ஐம்பத்திரண்டு வயதில் இருபத்தி ஐந்தின் சுறுசுறுப்புடன் இயங்கிக் கொண்டிருந்த மனைவி, திடீரென்று தளர்வும் சோர்வுமாய் சிரமப்பட்டு, வாந்தி எடுக்கவும், டாக்டரிடம் அழைத்துச் செல்ல, எதற்கெடுத்தாலும் நாலைந்து கலர்களில் காப்ஸ்யூலும் சிவப்பு மிக்சரும் கொடுப்பவர், இந்த முறை சற்று யோசித்து, ஸ்பெஷலிஸ்டிடம் சிபாரிசு செய்ய, அவர் பல டெஸ்டுகளை எடுத்து, முடிவில் அந்த வியாதியின் பெயரைச் சொல்லவும், சாமிநாதன் அரண்டு விட்டார்.

''நோய் மூணாவது கட்டத்தை அடைஞ்சிடுச்சு; பேஷண்டை நீங்க சந்தோஷமா வெச்சிக்கிட்டா இரண்டொரு வருஷம் தாக்குப் பிடிக்கலாம்...''

டாக்டர் சொன்னதையடுத்து, பெரிய பெண் மீனாவுக்கும், சின்னவள் பானுவுக்கும் தந்திகள் பறக்க, அவர்கள் தங்கள் குடும்பத்தோடு முறையே ஹுப்ளியிலிருந்தும் நாகையிலிருந்தும் வந்து விட்டனர்.

விஷயம் கேள்விப்பட்டு, நெய்வேலி அத்தையும் வந்து சேர்ந்தாள்.

''என்னமோப்பா... ரெண்டு பொண்ணுங்களையும் கரையேத்தி அவ கடமையை முடிச்சுட்டா; இன்னும் பாபு ஒருத்தன் தானே... ஆம்பிளைப் பிள்ளை; அவனைப் பத்திக் கவலையில்லை; எப்படியானாப் பொழைச்சுக்குவான்.. இருக்கற வரையில அவளை நிம்மதியா வைச்சுக்கோப்பா.. நா வாணா வந்திருந்து பாத்துக்கறேன்; ஒண்டிக் கட்டைதானே...'' அத்தை ஆறுதலாகச் சொன்னாள்.

அன்றிலிருந்து அம்மாவை யாரும் ஒரு வேலை செய்ய விடவில்லை; அவளை உட்கார்த்தி வைத்து, ஓடி ஓடி உபசரித்தார்கள்.

''இது என்ன... சாம்பாரா? ஒரே புளித் தண்ணி; வாயில வெக்க முடியல! அம்மா... ஏ அம்மா! ஏன், நீ எழுந்து சமைக்கக் கூடாதா?'' பாபு கத்தியது, ஊஞ்சலில் கண் மூடிப் படுத்திருந்த அம்மாவை உசுப்பியது.

பெரியக்கா மீனா ஓடோடி வந்தாள்.

''ஏண்டா கலாட்டா பண்றே? இத்தனை பேரும் வாயை மூடிட்டுச் சாப்பிடலை? அம்மாவுக்கு வந்திருக்கறதென்ன சாதாரண உடம்பா? அவ உழைச்சுக் கொட்டினதெல்லாம் போதும்; கொஞ்ச நாள் நிம்மதியா ரெஸ்ட் எடுக்க விடுடா...''

''நீ பேச மாட்டியா? உன் வேலை எல்லாம் முடிஞ்சாச்சு; கல்யாணம் பண்ணி வெச்சு, இரண்டு பிரசவம் பார்த்து, அந்தக் குழந்தைங்க பெரியவங்க ஆற வரைக்கும் தானே வச்சு வளர்த்து... ம்.. ம்.. எல்லாக் காரியமும் உனக்கு அம்மா செஞ்சுட்டாங்க. அதான் ரொம்பத் தாராளமா அவளை ரெஸ்ட் எடுக்கச் சொல்ற...''

''அடப் பாவி, ஒரே பிள்ளைன்னு செல்லம் குடுத்து, கான்வெண்ட் படிப்பெல்லாம் படிக்க வச்சு வளர்த்ததுக்கு நன்னா ஆட்டி வைக்கிற! பயங்கர வியாதியோட போராடிக்கிட்டிருக்கறதுகிட்ட, இதமாப் பேசி, அன்பா நடந்துகிட்டு, அவளை நிம்மதியா இருக்க விடறதை விட்டுட்டு இப்படி வேலை வாங்க எப்படிடா மனசு வந்தது உனக்கு?''

''ம்ம்... என் இடத்துல நீ இருந்திருந்தா என் கஷ்டம் புரிஞ்சிருக்கும். ஸ்கூல் படிப்பு முடியற வரைக்கும் ஊட்டி கான்வெண்ட் ஹாஸ்டல்; ட்வெல்த் வரை கோயம்புத்தூர் காலேஜ் ஹாஸ்டல்; இப்போத்தானே மெட்றாஸ் காலேஜ்ல இடம் கிடைச்சு அப்பா அம்மா கூட இருக்க வந்திருக்கேன். உங்களுக்கெல்லாம் செஞ்ச மாதிரி அம்மா எனக்கும் விதவிதமாச் சமைச்சுப் போட

ஜெயஸ்ரீ ராஜ்



ணும்; நல்ல வேலை கிடைக்கணும்னு கோயில் குளமெல்லாம் சுத்தணும்; நல்ல மாட்டுப் பொண்ணைத் தேடிக் கண்டுபிடிக் கணும்...''

''டேய்... டேய்... சுயநலம் பிடிச்ச பேயே! சும்மாவா சொன்னாங்க? தென்னையப் பெத்தா இளநீரு, பிள்ளையப் பெத்தாக் கண்ணீருன்னு...?''

''ஏன், பெண்ணைப் பெத்தா கழு நீருன்னும் சொல்லியிருப்பாங்களே.''

''என்னடா சொன்ன...?''

வார்த்தைகள் தடித்தன; கனல் பறந்தது. முடிவில் மீனா தன் பரிவாரத்துடன் ஹூப்ளிக்குக் கிளம்பி விட்டாள்.

"என்ன தினம் குழம்பு, ரசம்னு..? ஒரு சேஞ்சுக்குச் சப்பாத்தி குருமா, சன்னா பட்டூரான்னு செஞ்சா என்ன?'' பாபு முகம் சுளித்தான்.

''நாகைப்பட்டினத்துல வாழ்க்கைப் பட்டவகிட்டே நார்த்தங்காப் பச்சிடி கேளு. பண்ணிப் போடறேன்; நார்த் இண்டியன் டிஸ் என்னத்தைத் தெரியும்?'' சின்ன அக்காள் பானு நிதானமாகப் பரிமாறினாள்.

''உனக்கென்ன தெரியும்? அம்மாவை எழுந்து செய்யச் சொல்றதுதானே?''

''அம்மா முந்தா நேத்துத்தான் அந்த இஞ்செக்ஷன் போட்டுட்டு வந்து வாந்தி எடுத்துக்கிட்டிருக்காங்க.. அவங்களைப் போய் சமைக்கச் சொல்லலாமா?''

''ஒருநாள்தான் வாமிட் வரும்னு டாக்டர் சொன்னாங்க; இன்னிக்கு நார்மலாத்தானே இருக்காங்க? செஞ்சா என்ன?''

''உனக்குச் சன்னா பட்டூராதானே வேணும்? நாளைக்கே அம்மாவைக் கேட்டு பண்ணித் தரேன்!''

அவன் நெருப்பை வீசினாலும் அவள் தணிந்து போனாள்.

அப்போதுதான் பாபு எதிர்பார்த்திருந்த அந்தத் தருணம் வாய்த்தது. பானுவின் மூன்று வயது மகன் இங்க் பாட்டிலைக் கவிழ்த்து, பாபுவின் 'ரெகார்டு புக்' முழுவதையும் நீலமாக்கியிருந்தான். குழந்தையின் கன்னத்தில் பாபுவின் கை பேய்த்தனமாக இறங்கியது. அது வீறிட்டது!

''சனியன்.. எல்லாம் வந்து ஊட்டியடிக்க இது விடா சத்திரமான்னே தெரியலை!''

அடுக்கி வைத்த வைக்கோல் போர் போல மெத்தனமாக இருந்த பானுவைப் பொசுக்க, இந்தச் சிறு பொறி போதுமானதாயிருந்தது.

''என்னை விடப் பத்து வயசு சின்னவனாச்சேன்னு, என்னை என்ன சொன்னாலும் பொறுத்துக்கிட்டேன்; அதுவும் அம்மாவுக்காக... ஆனா என் குழந்தையை கரிச்சுக் கொட்ற வீட்டுல நிமிஷ நேரம் கூடத் தங்க முடியாது...'' அவள் புயல் போல் புறப்பட்டு நாகையை நோக்கிச் சென்றாள்.

**வீ**டு முக்கால்வாசி காலியாகி விட்டது! மிச்சமிருந்தது நெய்வேலி அத்தைதான் — அவளை வம்புக்கிழுக்க கங்கைச் சொம்பும் காசிக் கயிறுமே போதுமானதாயிருந்தது. கிளம்பும் போது கிசுகிசுப்பாக, ''சாமிநாதா.. இந்தப் பிள்ளையை சைக்கியாட்ரிக்கா... அது என்னவோ சொல்லுவாளேடா... அந்த டாக்டர்கிட்ட காட்டு'' என்று சொல்லி விட்டுப் போனது பாபுவின் எரிச்சலைப் பன்மடங்காக்கியது!

**எ**ல்லோரும் கிளம்பி விட்ட நிலையில் மறுநாள் சாமிநாதனே ரசம் வைத்துப் பரிமாறினார்.

''ம்ஹூம்... தக்காளி வேகவேயில்லை! பருப்பு முழிச்சுப் பார்க்குது.. அம்மாவை எழுந்து சமைக்கச் சொல்றதுக்கென்ன?



உன் சமையலைச் சாப்பிட்டா நாக்கே செத்துடும்...'' பாபு புலம்பலைத் தொடங்கினான்.

''உன் நாக்கு செத்துடுமோன்னு நீ கவலைப்படறே! என் மனைவியே செத்துடுவாளோன்னு நான் கவலைப்படறேன்பா...'' ஆவேசமாக ஆரம்பித்த சாமிநாதன், நிதானமாக அவனை ஏறிட்டார்.

''இதப் பாருப்பா.. நாப்பது வயசுக்கு மேல பிள்ளைக்கு ஆசைப்பட்டு உன்னைப் பெத்துக்கிட்டது என் தப்புத்தான். சின்ன வயசுல, அப்பா அம்மாவோட ஆரோக்கியமான ஆதரவுல வளரணும்னு எந்தப் பிள்ளையும் ஆசைப்படுவான்; உன் ஆசையில தப்பேயில்லை; ஆனா மேல ஒருத்தன் தானே அந்தப் பாக்கியத்தை நிர்ணயிக்கிறான்! உங்கம்மாவை சந்தோஷமா வெச்சுக்கிட்டா அவ இரண்டொரு வருஷமாவது இருப்பான்னு டாக்டர் சொன்னது தெரியுமில்லையா? நீ பண்ற ஆர்ப்பாட்டத்துல அவ சீக்கிரமே போய்ச் சேர்ந்துடுவா போலருக்கே...?''

அப்பாவின் கண்களில் வடிந்த நீர், பாபுவின் பார்வையிலிருந்த தணலைத் தணித்தது.

''அம்மா இரண்டொரு வருஷம் சந்தோஷமா இருந்தாப் போதும்னு நீங்க நினைக்கிறீங்க; ஆனா அவ அறுபது வருஷம் வாழணும்னு நான் நினைக்கிறேன். நீங்கள்ளாம் அம்மா தன் கடமைகள் முடிச்சுட்டா, இனி அவ சேவை இந்த வீட்டுக்குத் தேவையில்லை, அவ இல்லாமலேயே சமாளிச்சுக்கலாம்கறமாதிரி பேசிப்பேசி, அவளுக்குள்ள இருக்கக்கூடிய, வாழணும்கற ஆசையை மெது மெதுவாக் கொல்றீங்க. எந்த வியாதியையும் மருந்தால மட்டும் குணப்படுத்திட முடியாது. நோயாளிக்கு வாழ்க்கையில பிடிப்பும், வாழணும்கற ஆசையும் இருந்தா எந்தக் கொடிய நோயோடவும் வெற்றிகரமாப் போராட முடியும்.' அதுக்கு அவ வாழணும்கறது அவசியம்கற நினைப்பு வரணும். அதைத்தான் நான் உருவாக்கிக்கிட்டிருக்கேன். அதனாலதான் நான் இப்படிச் செய்தேன்; இதையே நான் தனியாச் செஞ்சிருந்தா, ஏதோ பச்சாதாபத்துல பரிதாபப்பட்டு அப்படிச் செய்ததா நினைச்சுப்பாங்க...'' என்ற மகனைச் சாமிநாதன் ஆரத் தழுவிக் கொண்டார்.

## அருள்வாக்கு



ஒவ்வொரு ரிஷியின் பேரில் வேத மந்திரங்கள் இருப்பதால் அந்த ரிஷியே அதைச் செய்தார், இயற்றினார், Compose பண்ணினார் என்று தப்பாக நினைத்து விடுகிறோம். உண்மையில் அந்த ரிஷிகள் மந்திரங்களைத் தாங்களே இயற்றவில்லை.

கொலம்பஸ் அமெரிக்காவைக் கண்டு பிடித்தார் என்றால் என்ன அர்த்தம்? அமெரிக்காவை அவரா உண்டு பண்ணினார்? இல்லை. ஏற்கெனவே இருந்த அமெரிக்காவை அவர் உலகுக்குத் தெரியும்படியாகப் பண்ணினார். இப்படியேதான் நியூடன், ஐன்ஸ்டீன் முதலிய எந்த விஞ்ஞானியும் புதுசாகச் சொல்கிற விதிகளை அவர்கள் செய்யவில்லை. நியூடன் சொல்லித்தானா ஒரு வஸ்துவை எறிந்தால் அது பூமியில் விழுகிறது? இல்லை. ஏற்கெனவே இருக்கிற விதிகளை இவர்கள்தான் புரிந்து கொண்டு லோகத்துக்குத் தெரிவித்தார்கள். அதே மாதிரி ஏற்கெனவே இருந்த மந்திரங்களைத்தான், அத்தனை ரிஷிகளும் கண்டு பிடித்து லோகத்துக்குக் கொடுத்தார்கள். அந்த மந்திரங்கள் இவர்களுடைய அப்பா, தாத்தா காலத்துக்கும் அதற்கும் முந்தியும் கூட இருக்கத்தான் செய்தன. ஆனால் அப்போது அவை உலகுக்குத் தெரியவில்லை. இவர்கள்தான் அவற்றைக் கண்டுபிடித்தார்கள். அதனால் இவர்கள் பேரிலேயே அவற்றைச் சொல்வது வழக்கமாகி விட்டது. ஒருத்தன் புஸ்தகம் எழுதுகிறான், இன்னொருவன் பப்ளிஷ் பண்ணுகிறான். ஒருத்தன் ஸினிமா எடுக்கிறான், இன்னொருத்தன் ரிலீஸ் பண்ணுகிறான். இப்படி மந்திரங்களை லோகத்துக்கு வெளியிட்டவர்கள் மட்டுமேதான் ரிஷிகள். ஏற்கெனவே அவை இருந்தாலும், நமக்குப் பிரயோஜனமாகிறபடி வெளிப்படுத்திப் பரம உபகாரம் பண்ணினது ரிஷிகள்தான். அதனால் அவர்கள் பேரைச் சொல்லி நமஸ்காரம் பண்ணுவது நியாயம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**




## அத்தியாயம் 88
# பட்டாபிஷேகம்

அருள்மொழிவர்மர் தொடர்ந்து புலவரைப் பார்த்துக் கூறினார்:— "ஐயா! தங்களை இன்னும் ஒன்று கேட்கிறேன். சிபிச் சக்கரவர்த்தி முதல் சிவஞான கண்டராதித்தர் வரையில் எங்கள் சோழ குலத்து மன்னர்களின் புகழைத் தாங்கள் விரித்துரைத்தீர்கள். அவையெல்லாம் இந்தப் புராதன குலத்தில் பிறக்கும் பாக்கியம் பெற்ற எனக்கு எவ்வளவு பொருத்தமோ, அவ்வளவு என் சிறிய தந்தையும் மகான் கண்டராதித்த சோழரின் உத்தமத் திருப் புதல்வருமான மதுராந்தகத் தேவருக்கும் பொருத்தமாகுமல்லவா?"

புலவர் "ஆம்" என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தார். சபையிலிருந்தவர்கள் அத்தனை பேரின் கண்களும் சுந்தர சோழரின் மறு பக்கத்தில் அடக்க ஒடுக்கத்துடன் அமர்ந்திருந்த மதுராந்தகத் தேவரின் மீது திரும்பின. இப்போதுதான் புதிதாகப் பார்ப்பது போல் மதுராந்தகரைக் கூர்ந்து கவனிக்கத் தொடங்கினார்கள். முன்னமே மிக்க கூச்சத்துடன் அமர்ந்திருந்த மதுராந்தகர் இப்போது மேலும் சங்கோசம் அடைந்தவராகிப் பூமாதேவியைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு குனிந்த தலை நிமிராமலிருந்தார்.

இதற்கிடையில் மாறுவேடம் பூண்டிருந்த ஆழ்வார்க்கடியான் மண்டபத்தின் ஒரு மூலைக்கு அவனை அழைத்துச் சென்று சின்னப் பழுவேட்டரையரிடம் கவலை தரும் ஒரு செய்தியைக் கூறினான். பாண்டிய நாட்டு ஆபத்துதவிகளைச் சேர்ந்தவனும் படகோட்டி முருகய்யனின் மனைவியுமான ராக்கம்மாள் என்பவளை மகுடாபிஷேக வைபவத்துக்காக வந்து கூடியிருந்த ஜனத் திரளிடையே அவன் கண்டான். எதற்காக இங்கே அவள் வந்திருக்கிறாள் என்பதை அறியும் பொருட்டுப் பின்தொடர்ந்து சென்றான். சின்னப் பழுவேட்டரையரின் அரண்மனைக்கு அருகில் ஜனக் கூட்டத்தில் அவள் மறைந்து விட்டாள். ஆழ்வார்க்கடியான் அங்கேயே நின்று அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்த போது அவள் மறுபடியும் காணப்பட்டாள். அவளுடன் இன்னொரு பெண் இடுப்பில் ஒரு குழந்தையுடன் சென்றாள். அந்த இன்னொரு பெண் சின்னப் பழுவேட்டரையரின் மகளைப் போல் தோன்றவே ஆழ்வார்க்கடியான் இன்னது செய்வது என்று தெரியாமல் சிறிது நேரம் திகைத்தான். சின்னப் பழுவேட்டரையரின் மகள்தான் என்று நிச்சயமாகச் சொல்லவும் முடியவில்லை. கொஞ்ச தூரம் அவர்களுடன் போய் உறுதி செய்து கொள்ளலாம் என்று போனான். கூட்டத்தில் அவர்களைப் பின்தொடர்ந்து போவது எளிய காரியமாக இல்லை. அவன் பின்தொடர்ந்து வருகிறான் என்பதை ராக்கம்மாளும் கவனித்திருக்க வேண்டும். அவள் திடீரென்று கூட்டத்துக்கு மத்தியில் "ஐயையோ! இந்த ஆள் எங்களைத் தொந்தரவு செய்கிறான். பெண்களைத் தொடர்ந்து வந்து தொல்லை கொடுக்கிறான்!" என்று கூச்சலிட்டாள். உடனே அங்கு நின்ற ஜனங்களில் பலர் ஆழ்வார்க்கடியானைச் சூழ்ந்து கொண்டு

அமரர் கல்கி

அவனைக் கண்டிக்கத் தலைப்பட்டார்கள். அவர்களிடம் ஆழ்வார்க்கடியான் அப்படியொன்றும் தான் செய்யவில்லையென்றும், அவர்கள் எல்லாரையும் போல் தானும் மகுடாபிஷேகக் காட்சிகளைப் பார்க்க வந்தவன் என்றும் சத்தியம் செய்து கூறினான். அவனைச் சூழ்ந்து கொண்ட ஜனத்திரளைச் சமாதானப்படுத்தி விட்டு அவன் வெளியேறுவதற்குள் ராக்கம்மாளும் இடுப்பில் குழந்தையோடு கூடிய மற்றொரு பெண்ணும் மறைந்து விட்டார்கள். ஆழ்வார்க்கடியான் கோட்டை வாசல் வரையில் அவர்களைத் தேடிக் கொண்டு சென்றான். கோட்டை வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு மூடு பல்லக்கில் குழந்தையுடன் கூடிய பெண் ஏறிக்கொண்டிருப்பதைக் கண்டான். பல்லக்கைச் சூழ்ந்து நாலு குதிரை வீரர்கள் நின்றார்கள். பல்லக்கில் அப் பெண் ஏறியதும், பல்லக்கும் குதிரைகளும் விரைந்து போகத் தொடங்கின. மேலும் அவர்களைத் தொடர்ந்து போகலாமா என்று யோசிப்பதற்குள் மகுடாபிஷேகத்தைப் பார்ப்பதற்காக வந்து கொண்டிருந்த ஒரு பெரிய ஜனக் கும்பல் ஆழ்வார்க்கடியானை இடித்துத் தள்ளிக்கொண்டு வந்து வெகுதூரம் கோட்டைக்குள்ளே கொண்டு வந்து சேர்த்து விட்டது. அந்தச் செய்தியைக் கோட்டைத் தளபதியிடம் உடனே தெரிவிப்பது முக்கியமானது என்று கருதி ஆழ்வார்க்கடியான் பட்டாபிஷேக மண்டபத்துக்கு வந்து சேர்ந்தான். அருள்மொழிவர்மரின் கட்டளையின் பேரிலேயேதான் இவ்வாறு மாறுவேடம் பூண்டிருப்பதாயும், ஜனக் கூட்டத்தில் அங்குமிங்கும் இருந்து ஜனங்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்பதை அறிந்து வந்து தம்மிடம் சொல்லும்படி பொன்னியின் செல்வர் பணித்ததாயும், அந்தக் கடமையை நிறைவேற்றி வரும் சமயத்திலேயே மேற்சொன்ன நிகழ்ச்சியைத்தான் காணும்படி நேர்ந்ததென்றும் ஆழ்வார்க்கடியான் விளக்கிய பிறகு, சின்னப் பழுவேட்டரையர் அவனுடைய வார்த்தைகளில் பூரண நம்பிக்கை கொண்டார். தம்முடைய மகளாகிய பழைய மதுராந்தகன் மனைவியைப் பற்றி அவருக்கு முன்னமே கவலை இருந்து வந்தது. திருமலை கூறிய செய்தி அவருக்குத் திகிலை விளைவித்து மனக் குழப்பத்தையும் உண்டாக்கி விட்டது. தாம் தம் அரண்மனைக்குச் சென்று உண்மையை அறிந்து வருவதாகவும், தாம் அவசரமாகப் போக நேர்ந்ததைப் பற்றி முதன் மந்திரி அநிருத்தர் மூலம் சுந்தர சோழருக்கும் பொன்னியின் செல்வருக்கும் அறிவிக்கும்படியும் பணித்து விட்டுச் சின்னப் பழுவேட்டரையர் அந்த மண்டபத்தில் இருந்து வெகு வேகமாக வெளியேறினார்.

ஆழ்வார்க்கடியான் வந்து பொன்னியின் செல்வரிடம் சொல்ல வேண்டிய அவசியம் இருக்கவில்லை. தமிழ்ப் புலவர் நல்லன் சாத்தனாரிடம் பேசிக் கொண்டிருந்த போதே இளவரசர் சின்னப் பழுவேட்டரையர் மீதும் கவனம் செலுத்தி வந்தார். அவர் மண்டபத்தை விட்டு அகன்றவுடன் பொன்னியின் செல்வருடைய திருமுகம் முன்னைக் காட்டிலும் ஒளி பொருந்தியதாயிற்று. சக்கரவர்த்தியின் பக்கம் திரும்பி நின்று அவர் கம்பீரமான குரலில் கூறலுற்றார்:—

"தந்தையே! நம் கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையர் ஏதோ மிக அவசர காரியமாக வெளியே செல்லுகிறார். அது காரணமாக இந்த மகுடாபிஷேக வைபவம் தடைப்பட வேண்டியதில்லை. இந்தச் சபையில் இன்னும் பல பெரியோர்கள் இருக்கிறார்கள். வீர மறக்குலத்து முதல்வர்கள் இருக்கிறார்கள். வேலும் வாளும் ஏந்தி எத்தனையோ போர்க்களங்களில் போர் செய்து விழுப்புண் பெற்றவர்கள் இருக்கிறார்கள். அவர்களில் யாரேனும் தங்கள் வீரத் திருக்கரத்தினால் இந்தப் புராதன சோழ குலத்தின் மணி மகுடத்தை எடுத்துச் சூட்டலாம். அவ்வளவு பெரும் இந்தப் பொற் கிரீடத்தையும் உடைவாளையும் செங்கோலையும் தங்கள் ஆய்வந்த கரத்தினால் தொட்டு ஆசி கூறியிருக்கிறார்கள். ஆகையால் இனி என் கரத்தினால் நானே எடுத்து இம் மணி மகுடத்தைச் சூடிக் கொண்டாலும், தவறு ஒன்றுமில்லை. ஆனால், அப்படிச் செய்வதற்கு முன்னால், தந்தையே! தங்களிடத்தும் இங்கே விஜயம் செய்திருக்கும் பெரியோர்களுக்கும் மறக்குலத்தவர்களுக்கும் விண்ணப்பம் ஒன்று செய்து கொள்ள விரும்புகிறேன். புறாவின் உயிரைக் காப்பதற்காகச் சதையை அரிந்து கொடுத்த சிபிச் சக்கரவர்த்தியின் பரம்பரையில் வந்தவன் நான். அதனால் நம் குலத்தவர் அனைவரையும் போல் 'செம்பியன்' என்ற குலப்பெயர் பெற்றிருக்கிறேன். கன்றுக் குட்டியை இழந்த பசுவுக்கு நீதி வழங்கும் பொருட்டு மகனுக்கு மரண தண்டனை விதித்த மனுநீதிச் சோழரின் வம்சத்தில் வந்தவன் நான். நம் குலத்து முன்னோர்கள் அனைவரும் போர்க்களத்தில் புறமுதுகிடாத வீரர்கள் என்ற புகழ் பெற்றது போலவே, நீதி நெறியிலிருந்து அணுவளவும் தவறாதவர்கள் என்ற புகழையும் அடைந்து வந்திருக்கிறார்கள். அவர்களுடைய வழியில் வந்தவனாகிய நான் நீதி நெறிக்கு மாறாக நடக்கலாகுமா? இன்னொருவருக்கு நியாயமாக உரிய பொருளையோ, பதவியையோ அபகரிக்கலாமா?

நம் ஆஸ்தானப் புலவர் நம் குல முன்னோர்களைப் பற்றி அழகான சந்தக் கவியில் பாடி வந்த போது அவர்கள் அனைவரும் என் மனக் கண் முன்னால் வந்து தரிசனம் அளித்தார்கள். இராஜ கேசரிகளும் பர கேசரிகளும் வரிசை வரிசையாக நின்று காட்சி தந்தார்கள். நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் பெருங்கிள்ளியும் கோச்செங்கணாரும் என்னைக் கருணை ததும்பும் கண்களால் நோக்கி 'எங்கள் குலத்தில் உதித்த மகனே! இந்தச் சிங்காதனம் உனக்கு உரியதா என்று சற்று சிந்தித்துப் பார்!' என்றார்கள். விஜயாலயரும் ஆதித்தரும் பராந்தகரும் இராஜாதித்தரும் என்னை வீரத் திரு விழிகளால் பார்த்து, 'குமாரா! நீ இந்தச் சிங்காதனத்தில் ஏறுவதற்கு உரியவனாக என்ன வீரச் செயல் புரிந்தாய்? சொல்!' என்று கேட்டார்கள். நான் அவர்களுக்கு மறுமொழி சொல்லத் தயங்கினேன். பின்னர் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அவர்களைக் கைகூப்பி வணங்கி விண்ணப்பித்துக் கொண்டேன். 'சோழ குலத்து முதல்வர்களே! நீங்கள் செய்த அரும்பெரும் செயல்களில் ஆயிரத்தில் ஒன்று கூட நான் செய்யவில்லை. ஆனால் உங்கள் ஆசியுடன் இனிமேல்தான் அத்தகைய காரியங்களைச் செய்யப் போகிறேன். நீங்கள் நிலைநாட்டிய சோழ குலத்துப் புகழ் மேலும் வளர்ந்தோங்கி நீடூழி நிலைத்திருக்கும்படியான காரியங்களைச் செய்யப் போகிறேன். செயற்கரிய செயல்களைச் செய்யப் போகிறேன். உலகம் வியக்கும் செயல்கள் புரியப் போகிறேன். வீராதி வீரர்களாகிய நீங்களே பார்த்து மெச்சும்படியான தீரச் செயல்களைப் புரிந்து உங்கள் எல்லாருடைய வாழ்த்துக்களையும் பெறப் போகிறேன்!' என்று இவ்விதம் என்னுடைய குலத்து முன்னோர்களிடம் நான் தெரிவித்தேன். அவர்களும் முகமலர்ந்து எனக்கு அன்புடன் ஆசி கூறினார்கள்....''



வேச உணர்ச்சி ததும்புமாறு பொன்னியின் செல்வர் கூறி வந்த சொற்களைக் கேட்டுக் கொண்டு இருந்த அச் சபையில் உள்ளோர் எல்லாரும் ரோமாஞ்சனம் அடைந்தார்கள். அவர்களில் ஒருவர் ''வீர வேல்! வெற்றி வேல்!'' என்று முழங்கினார். உடனே சபையில் இருந்த அத்தனை பேரும் சேர்ந்து ''வீர வேல்! வெற்றி வேல்!'' என்று முழங்கிய ஒலி பட்டாபிஷேக மண்டபத்துக்கு வெளியிலும் கேட்டது. அங்கே கூடியிருந்த மக்களிடையே பெருங் கிளர்ச்சியை உண்டாக்கிற்று.

பொன்னியின் செல்வர் எல்லாருடனும் சேர்ந்து தாமும் ''வெற்றி வேல்! வீர வேல்!'' என்று முழங்கினார். முழக்கம் அடங்கியதும் கூறினார்:— ''தந்தையே! சோழ நாட்டு வீரர்களுக்குரிய இந்த முழக்கம் ஒரு சமயம், தங்கள் பாட்டனார் பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில், வட பெண்ணைக்கு அப்பால் துங்கபத்திரை — கிருஷ்ணா நதி வரைக்கும் கேட்டது. அந்த நதிகளுக்கு அப்பாலுள்ள வேங்கி நாட்டாரும் கலிங்க நாட்டாரும் கல்யாண புரத்தாரும் மானிய கேடத்தாரும் அந்த முழக்கத்தைக் கேட்டு நடுநடுங்கினார்கள். இன்னும் மேற்குத் திசையிலும் தெற்குத் திசையிலும் கிழக்குத் திசையிலும் நூறு நூறு மரக்கலங்களில் ஆயிரம் பதினாயிரம் சோழ நாட்டு வீரர்கள் சென்று இந்த நாட்டு வர்த்தகத்தைக் காப்பாற்றி வந்தார்கள். தந்தையே! தாங்கள் நோய்வாய்ப்பட்டுப் படுத்த நாளிலிருந்து சோழ நாட்டு வீர முழக்கத்தின் தொனி குறைந்திருக்கிறது. நாலாபுறமும் பகைவர்கள் தலையெடுத்து வருகிறார்கள். வேங்கியும் கலிங்கமும் கல்யாணபுரமும் மானிய கேடமும் நம்மை வலுச் சண்டைக்கு அழைக்கின்றன. வடக்கே இமய மலைக்கு அப்பாலிருந்து இந்தப் பழம்பெரும் பாரத தேசத்துக்கு வந்து கொண்டிருக்கும் பகைவர்களின் பேராபத்தைப் பற்றி அவர்கள் சிந்திக்கவில்லை. சோழ நாட்டின் வளத்தைப் பார்த்துப் பொறாமைப்பட்டுப் புழுங்கிக் கொண்டிருக்கிறார்கள். இலங்கையில் மகிந்தன் இன்னமும் படை திரட்டிச் சேர்த்துக் கொண்டிருக்கிறான். வீர பாண்டியன் இறந்து விட்டாலும் அவனுடைய குலத்தைச் சேர்ந்தவன் என்று யார் தலையிலாவது பாண்டிய நாட்டு மணி மகுடத்தைச் சூட்டிக் கலகம் உண்டாக்க முயன்று கொண்டிருக்கிறான். மகிந்தனும் பாண்டிய நாட்டு ஆபத்து உதவிகளும் சேர்ந்து சதி செய்து, வீரத்திலே அபிமன்யுவையும் அரவானையும் நிகர்த்த என் அருமைத் தமையனார் ஆதித்த கரிகாலரின் உயிருக்கு இறுதி தேடி விட்டார்கள். மேற்கே சேர மன்னன் பெரியதோர் யானைப் படையையும் மரக்கலப் படையையும் சேகரித்துக் கொண்டிருக்கிறான். சேரனுக்கு மரக்கலப் படையைத் தயாரித்துக் கொடுப்பதில் மேற்குத் திசையிலிருந்து புதிதாகக் கிளம்பியிருக்கும் ஒரு முரட்டுக் கூட்டத்தார் உதவி செய்கிறார்கள். சோழ நாட்டைச் சூழ்ந்திருக்கும் புதிய பேரபாயம் இது. தந்தையே! நெடுங் காலமாக அரபு தேசத்தவர்கள் கப்பல் தொழிலில் சிறந்து விளங்குகிறார்கள். சீன தேசம் வரையில் சென்று வர்த்தகம் நடத்தி வருகிறார்கள். நமது நாட்டுத் துறைமுகங்களுக்கும் அவர்கள் அடிக்கடி வந்து செல்வதுண்டு. நாகரிகத்தில் சிறந்த அந்தப் பழைய அராபியர்

களை அடக்கி ஒடுக்கி விட்டு, புதிய அராபியர் கூட்டம் ஒன்று இப்போது கிளம்பியிருக்கிறது. அவர்கள் அராபியர்கள்தானா அல்லது அக்கம் பக்கத்து நாட்டவர்களோ, நாம் அறியோம். ஆனால் மூர்க்கத்தனத்தில் அவர்களை மிஞ்சியவர்களை எங்கும் காண முடியாது. நானே அவர்களுடைய செயல்களை நேரில் பார்க்கும்படி நேரிட்டது. என்னைச் சிறைப்படுத்தி அழைத்துக் கொண்டு வருவதற்காகத் தங்கள் கட்டளையின் பேரில் நம் கோட்டைத் தலைவர் சின்னப் பழுவேட்டரையர் இரண்டு கப்பல்களில் வீரர்களை அனுப்பி வைத்திருந்தார்....''

சுந்தர சோழர் இந்தச் சமயம் குறுக்கிட்டுத் தழுதழுத்த குரலில், ''மகளே! அப்படி நான் அனுப்பிய காரணத்தை நீ அறியாயா?'' என்று கேட்டார்.

''தந்தையே! அதை நான் நன்கு அறிந்துள்ளேன். இங்கே அரசியல் உரிமை பற்றிக் குழப்பம் நேர்ந்திருந்தது; பாண்டிய நாட்டு ஆபத்து உதவிகளைப் பற்றியும் கேள்விப்பட்டிருந்தீர்கள்; ஆகையால் என்னைப் பத்திரமாகத் தங்களிடம் கொண்டு சேர்ப்பதற்காகவே சிறைப்படுத்திக் கொண்டு வரச் சொன்னீர்கள். என் மீது தங்களுடைய அளவில்லாத அன்பும்பரிவுந்தான் அத்தகைய கட்டளை இடும்படி செய்தது. எல்லாருக்கும் அது நன்கு தெரியட்டும் என்றுதான் இங்கே சொல்கிறேன். அப்படி என்னைச் சிறைப்படுத்த வந்த நம் வீரர்கள் நூற்றுக்கணக்கானவர்கள். ஈழ நாட்டுக்





கடற்கரையில் உடைந்த கப்பலிலிருந்து வந்து ஒதுங்கியிருந்த அராபியர்களோ பத்துப் பேருக்கு மேலிருக்க மாட்டார்கள். நம் வீரர்களில் எத்தனை பேரை அவர்கள் திடீரென்று தாக்கிக் கொன்று விட்டார்கள் என்பதைப் பார்த்த நான் அடைந்த வேதனை இன்னமும் என் மனத்தை விட்டு அகலவில்லை. அந்தப் புதிய அராபிய சாதியார் சேர மன்னனுக்குக் கப்பல் கட்டுவதில் உதவி செய்கிறார்கள். அது மட்டுமல்ல; கலிங்க நாட்டாருடனும் தொடர்பு கொண்டு இருக்கிறார்கள். மூன்று நாட்டாரும் சேர்ந்து சோழ நாட்டுக் கடல் வாணிபத்தை அடியோடு அழித்து விடத் தீர்மானித்திருக்கிறார்கள். கடல் கொள்ளைக்காரர்கள் அரபு நாட்டாராயிருந்தால்தானென்ன, அல்லது நம்முடன் எத்தனையோ விதத்தில் தொடர்பு கொண்ட சேர தேசத்தாராயிருந்தால்தானென்ன? நம் கடல் வாணிகத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானால், நமது கடற்படையைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். ஆயிரமாயிரம் புதிய மரக்கலங்களைக் கட்ட வேண்டும். புதிய புதிய மாலுமிகளைப் பழக்க வேண்டும். கப்பலில் இருந்து கொள்ளைக்காரர்களுடன் போரிடக்கூடிய வீரர்களைச் சேர்க்க வேண்டும். கீழைக் கடலில் உள்ள தீவுகளில் எல்லாம் புலிக் கொடியை நாட்டி, ஆங்காங்கே நம் வீரர்களை நிறுத்தி வைக்க வேண்டும். தந்தையே! இந்தக் காரியங்களையெல்லாம் செய்வதாக நம் குலத்து முன்னோர்களுக்கு நான் வாக்குறுதி அளித்திருக்கிறேன். அதை நிறைவேற்றுவதற்குத் தங்களுடைய அனுமதி வேண்டும், இந்தச் சபையிலுள்ள பெரியோர்களின் சம்மதியும் வேண்டும்!’’



வ்வாறு பொன்னியின் செல்வர் கூறி நிறுத்தியவுடன் சுந்தர சோழர், ''மகனே! சோழ குலத்து வீரப் புகழை நீ வளர்ப்பதற்கு நான் தடை செய்வேனா? சோழ நாட்டுக் கடல் வாணிபத்தைப் பாதுகாப்பதற்கு இந்தச் சபையில் உள்ளவர்கள்தான் தடை சொல்லப் போகிறார்களா?'' என்றதும், மீண்டும் அச் சபையில் ''வீரவேல்! வெற்றி வேல்!'' என்ற முழக்கம் எழுந்தது.

''தந்தையே! தாங்களும்இச் சபையோரும் தடை சொல்ல மாட்டீர்கள். நான் ஏற்கும் காரியங்களில் வெற்றியடைய வேண்டும் என்று ஆசி கூறியும் அனுப்புவீர்கள். தங்கள் ஆசி நிறைவேறி நான் எடுத்த காரியங்களில் வெற்றி கிடைக்க வேண்டும் என்றால், முதலில் என் உள்ளத்தில் நிம்மதி ஏற்பட வேண்டும். நேர்மையற்ற காரியம் எதையும் நான் செய்யவில்லை, என் குலத்து முன்னோர்கள் அங்கீகரிக்க முடியாத செயல் எதுவும் நான் புரியவில்லை. பிறருக்கு உரியதை நான் ஆசையினால் அபகரித்துக் கொண்டு விடவில்லை என்ற உறுதியை நான் அடைய வேண்டும். குல தர்மத்துக்கு ஒவ்வாத காரியத்தை இங்கே நான் செய்து விட்டுப் புறப்பட்டேனானால், என் உள்ளம் என்னை வருத்திக் கொண்டேயிருக்கும். பகைவர்களிடம் போரிட்டு எப்படி வெற்றி கொள்வேன்? தர்மத்தை நிலைநாட்டப் போராடுகிறோம் என்ற நம்பிக்கை என் மனத்தில் எப்படி ஏற்படும்? முன்னொரு தடவை இலங்கைச் சிங்காதனத்தை நான் கவர்ந்து கொள்ள ஆசைப்பட்டதாக ஒரு பெரும் வதந்தி ஏற்பட்டது....''

''குழந்தாய்! அதை யாருமே நம்பவில்லை. நீ அத்தகைய குற்றத்தைச் செய்யக் கூடியவன் என்று எண்ணியதில்லை'' என்றார் சக்கரவர்த்தி.

''தாங்கள் நம்பியிருக்க மாட்டீர்கள், தந்தையே! ஆனால் அத்தகைய பேச்சு என் காதில் விழுந்ததும் என் மனம் எவ்வளவோ வேதனைப்பட்டது. ஈழ நாட்டுப் பிக்ஷுக்கள் எனக்கு அளித்த மணி மகுடத்தை நான் வேண்டாம் என்று மறுதளித்ததை என் நண்பர்கள் இருவர் அறிவார்கள். அவர்கள் அப்போது என் அருகிலேயே இருந்தார்கள்....''

சபையில் இருந்த புத்த பிக்ஷுக்களின்

தலைவர் "ஆம், ஆம்! நாங்களும் அதை அறிவோம்" என்று சொன்னார்.

"ஒரு பொய்யான அவதூறு என் உள்ளத்தில் அவ்வளவு வேதனையை உண்டாக்கியது. அதைத் தாங்கள் நம்பவில்லையென்றால், நம்பியவர்கள் சிலரும் இருந்தார்கள். உண்மையாகவே நான் இப்போது இன்னொருவருக்கு உரிமையாக வேண்டிய சிங்காதனத்தை அபகரித்துக் கொண்டேனென்றால், அதனால் இந்தக் குலத்துக்கு எத்தனை அபகீர்த்தி உண்டாகும்? என் வாழ்நாளெல்லாம் அதைப் பற்றி வேதனைப் பட்டுக் கொண்டிருப்பேன். வேறு எந்தப் பெரிய காரியத்திலும் மனத்தைச் செலுத்த முடியாது; உற்சாகமாகச் செய்யவும் முடியாது..."

வெகு நேரம் குனிந்த தலைநிமிராமலிருந்த மதுராந்தகத் தேவர் இப்போது பொன்னியின் செல்வரை அண்ணாந்து பார்த்து ஏதோ சொல்வதற்குப் பிரயத்தனப்பட்டார். பொன்னியின் செல்வர் வந்தியத்தேவனைப் பார்த்துச் சமிக்ஞை செய்யவே அவ் வீரன் மதுராந்தகத் தேவர் பக்கத்தில் போய் நின்று கொண்டான். அவர் காதில் மட்டும் கேட்கும்படியான மெல்லிய குரலில், "நண்பா! சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய முதல் தேவாரத்தின் முதல் அடி என்ன?" என்று கேட்டான். இந்தச் சமயத்தில் இது என்ன கேள்வி என்ற வியப்புடன் மதுராந்தகர் "பித்தா! பிறைசூடி!" என்றார். வந்தியத்தேவன் கள்ளக் கோபத்துடன் "என்ன, ஐயா, என்னைப் பித்தன் என்கிறீர்? நீர் அல்லவோ பெண் பித்துப் பிடித்து அலைகிறீர்? அதோ, பாரும்! உமது தர்ம பத்தினி பூங்குழலி உம்மைப் பார்த்துச் சிரிப்பதை!" என்றான். இது என்ன? இந்த நல்ல சிநேகிதன் இப்படித்திடீரென்று வலுச் சண்டைக்கு வருகிறானே என்ற எண்ணத்துடன் மதுராந்தகர் பெண்மணிகள் வீற்றிருந்த இடத்தை நோக்கினார். உண்மையில், அப்போது பூங்குழலி இவர் பக்கம் பார்க்கவேயில்லை. பூங்குழலி, குந்தவை, வானதி, செம்பியன் மாதேவி, வானமாதேவி ஆகிய அரண்மனைப் பெண்மணிகள் யாவரும் அளவில்லாத ஆர்வம் கண்களில் ததும்பப் பொன்னியின் செல்வரையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மறுபடி மதுராந்தகர் பொன்னியின் செல்வரைப் பார்த்த போது அவர் சோழ குலத்தின் புராதன மணி மகுடத்தைத் தமது கரங்களில் தாங்கிக் கொண்டிருப்பதைக் கண்டார்.

"தளபதி சின்னப் பழுவேட்டரையர் இன்னும் திரும்பி வரவில்லை. அதனால் என்ன? குறிப்பிட்ட வேளையில் முடிசூட்டு விழாவை நானே நடத்தி விடுகிறேன்! தந்தையே! விஜயாலய சோழர் முதல் நம்



முன்னோர்கள் அணிந்து வந்த இந்த மணி மகுடத்தைத் தாங்கள் எனக்கு அளிக்க உவந்தீர்கள். சாமந்தர்கள், தளபதிகள், கோட்டத் தலைவர்கள், பொது மக்கள் அனைவரும் அதை அங்கீகரித்தார்கள். ஆகையால், இந்தக் கிரீடம் இப்போது என் உடைமை ஆகி விட்டது. என் உடைமையை நான் என் இஷ்டம் போல் உபயோகிக்கும் உரிமையும் உண்டு அல்லவா? என்னை விட இந்தக் கிரீடத்தை அணியத் தகுந்தவர் இங்கே ஒருவர் இருக்கிறார். அவர் என்னை விடப் பிராயத்தில் மூத்தவர். இந்தச் சோழ இராஜ்யத்துக்கு என்னை விட அதிக உரிமை அவருக்கு நியாயமாக இருந்தபோதிலும் அவர் அதைக் கோரவில்லை. நான் முடி சூட்டிக் கொண்டு சிங்காதனத்தில் அமர்வதைப் பார்த்து மகிழச் சித்தமாக இங்கு வந்திருக்கிறார். அவர் என் உயிரை ஒரு தடவை காப்பாற்றினார். என் உயிரினும் இனியவரான என் நண்பரைக் காப்பாற்றினார். இந்தச் சோழ குலத்துக்கு நேர்வதற்கு இருந்த பெரும் விபத்து நேரிடாமல் தடுத்தார். இப்படிப்பட்ட சிறப்பான காரியம் எதுவும் நான் இதுவரையில் இந்நாட்டுக்குச் செய்யவில்லை. ஆகையால் இந்த மணி மகுடத்தை மகான் கண்டராதித்தரின் குமாரரும் என் சிறிய தந்தையுமான மதுராந்தகத் தேவரின் தலையில் சூட்டுகிறேன்!''



வ்விதம் பொன்னியின் செல்வர் சொல்லிக் கொண்டே சக்கரவர்த்தியின் மறு பக்கத்தில் வீற்றிருந்த மதுராந்தகரின் அருகில் போய் அவர் சிரஸில் கிரீடத்தை வைத்தார்.

மகுடத்தை வைக்குங்கால் மதுராந்தகர் அதைத் தடுக்காமலிருக்கும்பொருட்டு வந்தியத்தேவன் முன் ஜாக்கிரதையாக அவர் பின்னால் நின்று தோள்கள் இரண்டையும் அமுக்கி இறுக்கிப் பிடித்துக் கொண்டிருந்தான்.

ஆனால் மதுராந்தகரோ அப்படி ஒன்றும் செய்ய முயலவில்லை. அவர் மெய்மறந்து தம் வசமிழந்து உண்மையிலேயே பித்துப் பிடித்தவர் போல் நாலு புறமும் வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தார்.

மணி மகுடத்தைச் சூட்டியதும் பொன்னியின் செல்வர் ''கோப்பரகேசரி மதுராந்தக உத்தமச் சோழ தேவர் வாழ்க!'' என்று முழங்கினார். ''சக்கரவர்த்தி உத்தமச் சோழர் வாழ்க! வாழ்க!'' என்று வந்தியத்தேவன் பெருங்குரலில் கூவினான்.

இத்தனை நேரமும் பிரமித்துப் போய் நின்ற முதன் மந்திரி அநிருத்தர் முதலியவர்கள் அனைவரும் இப்போது ''கோப்பரகேசரி மதுராந்தக உத்தமச் சோழர் வாழ்க!'' என்று முழங்கினார்கள்.

சுந்தர சோழச் சக்கரவர்த்தி உணர்ச்சி மிகுதியால் பேசும் சக்தியை அடியோடு இழந்திருந்தபடியால் தம் கையிலிருந்த பல நிற மலர்களை மதுராந்தக உத்தமச் சோழர் மீது தூவினார்.

அரண்மனைப் பெண்மணிகளும் சக்கரவர்த்தியைப் பின்பற்றி மதுராந்தகர் மீது மலர் மாரி பொழிந்தார்கள்.

மதுராந்தகர் சிறிது திகைப்பு நீங்கியதும் எழுந்து நேரே செம்பியன்மாதேவியிடம் சென்று கும்பிட்டு நின்றார். அந்த மூதாட்டியின் கண்களிலிருந்து கண்ணீர் அருவி போலப் பொங்கிப் பொழிந்து கொண்டிருந்தது.

''மகனே! இறைவனுடைய திருவுள்ளம் இவ்வாறு இருக்கிறது! நீயும் நானும் அதற்கு எதிராக நடப்பது எப்படிச் சாத்தியம்?'' என்றார்.

பொன்னியின் செல்வர், சபையில் கூடியிருந்த மற்ற புலவர் பெருமக்கள், பட்டர்கள், பிக்ஷுக்கள் ஆகியவர்களைப் பார்த்து, ''நீங்கள் இனி உங்கள் வாழ்த்துக் கவிதைகளை உசிதப்படி மாற்றிக் கொண்டு சொல்லுங்கள்!'' என்றார்.

அவர்களும் அவசர அவசரமாக வாழ்த்துக் கவிகளை மாற்றி அமைத்துக் கொண்டு பாடத் தொடங்கினார்கள்.



துராந்தக உத்தமச் சோழருக்கு மணிமகுடம் சூட்டப்பட்ட சிறிது நேரத்துக்குள்ளே அந்தச் செய்தி தஞ்சை வீதிகளில் கூடியிருந்த மக்களிடையில் பரவி விட்டது. அது விரைவாகப் பரவுவதற்கு வந்தியத்தேவனும் ஆழ்வார்க்கடியானும் பெரிதும் காரணமாக இருந்தார்கள். பொன்னியின் செல்வர் கட்டளைப்படி அவர்கள் வீதிகளில் ஆங்காங்கே ஆட்களை நிறுத்தியிருந்தார்கள். அவர்களிடமெல்லாம் அவசரமாகச் சென்று சொல்லி, ''கோப்பரகேசரி உத்தமச் சோழ தேவர் வாழ்க!'' என்று முழங்கச் செய்தார்கள். இளவரசர் அருள்மொழிவர்மர் தமக்கு அளிக்கப்பட்ட இராஜ்யத்தைத் தம் சிறிய தந்தை மதுராந்தகருக்கு அளித்து விட்டார் என்றும், கடற் கொள்ளைக்காரர்களை அடக்குவதற்காகப் பெரிய கப்பல் படை சேர்த்துக் கொண்டு சீக்கிரம் புறப்படப் போகிறார் என்றும் வாய்மொழியான செய்தி மக்களிடையே விரைந்து பரவிக் கொண்டிருந்தது. சிலர் இதை உடனே நம்பினார்கள். பொன்னியின் செல்வரின் பெருங்குணத்துக்கு இது உகந்ததே என்று அவர்கள் கருதினார்கள். இன்னும் சிலர் ''கையில்

# அற்புத நறுமணம் ஃப்ரெஸ்கா.

கோத்ரெஜ் வழங்கும் ஃப்ரெஸ்கா.
நிறைந்த சுகந்தம், நிகரில்லா
நறுமணமுள்ள அற்புதமான சோப்.
வளமான நுரை தந்திடும்,
வந்திடும் அதிக நாட்களுக்கு
ஃப்ரெஸ்கா.
அடக்கமான விலையிலே
அற்புதமான சோப் ஃப்ரெஸ்கா.




கோத்ரெஜ்

கிடைத்த பேரரசை யார்தான் இன்னொருவருக்குக் கொடுப்பார்கள்?'' என்று ஐயுற்றார்கள். பதினாயிரக்கணக்கான ஏக காலத்தில் பலவாறு பேசிய குரல்களும், ''வாழ்க! வாழ்க!'' என்னும் முழக்கங்களும் சேர்ந்து புயற் காற்று அடிக்கும்போது அலை கடலில் கிளம்பும் பேரொலியைப் போல் ஒலித்தன.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அலங்கரிக்கப்பட்ட பட்டத்து யானையின் மீது அமைத்த பொன்மயமான அம்பாரியில் அமர்ந்து மதுராந்தக உத்தமச் சோழர் பவனி கிளம்பியதும் எல்லாச் சந்தேகங்களும் மக்களுக்குத் தீர்ந்து விட்டன. யானையின் கழுத்தில் யானைப் பாகனுடைய பீடத்தில் அமர்ந்திருப்பவர் பொன்னியின் செல்வர் என்பதைக் கண்டதும் மக்களுடைய உற்சாகம் எல்லை கடந்ததாயிற்று. ''கோப்பரகேசரி மதுராந்தக உத்தமச் சோழர் வாழ்க!'' என்று மக்களின் குரல்கள் முழங்கின. ஆனால் அவர்களுடைய உள்ளங்களில் பொன்னியின் செல்வரின் செயற்கருஞ் செயலே குடிகொண்டிருந்தது. அதை எண்ணியதனால் அவர்களுடைய அகங்களைப் போல் முகங்களும் மலர்ந்திருந்தன. பொன்னியின் செல்வர் மணி மகுடம் சூட்டிக் கொண்டு பவனி வந்தால் மக்கள் எவ்வளவு குதூகலம் அடைந்திருப்பார்களோ, அதை விடப் பன்மடங்கு அதிகமான குதூகலத்தை இப்போது வெளியிட்டார்கள்.



மயமலைச் சிகரத்தில் புலி இலச்சினையைப் பொறித்த கரிகால்பெருவளத்தானைப் பொன்னியின் செல்வர் மிஞ்சி விட்டார் என்றும், தியாக சிகரத்தில் இவர் தமது இலச்சினையை என்றும் அழியாதவண்ணம் பொறித்து விட்டார் என்றும் அறிஞர்கள் மகிழ்ந்தார்கள்.

சாதாரண மக்களோ, அப்படியெல்லாம் அலாதி அலங்காரங்களையும் உபமான உபமேயங்களையும் தேடிக் கொண்டிருக்கவில்லை. மதுராந்தகர் தலையில் மணிமகுடத்தைச் சூட்டி விட்டுப் பொன்னியின் செல்வர் பட்டத்து யானையை ஓட்டிக் கொண்டு செல்லும் காட்சி அவர்கள் உள்ளத்தைப் பரவசப்படுத்தி விட்டது. ஆடிக் கொண்டும் பாடிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் வாழ்த்திக் கொண்டும் ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டும் மலர்களைத் தூவிக்கொண்டும் மஞ்சள் நிற அட்சதையை வாரி இறைத்துக் கொண்டும் மக்கள் ஒரே கோலாகலத்தில் தங்களை மறந்து ஆழ்ந்திருந்தார்கள்.

இவ்விதம் குதூகலத்தினால் மெய்மறந்து கூத்தாடிக் கொண்டிருந்த மாபெரும் ஜனக் கூட்டத்திடையே பட்டத்து யானையைச் செலுத்திக்கொண்டு போவது எளிய காரியமாயில்லை. பொன்னியின் செல்வரும் அவசரப்படாமல் ஜனங்களின் குதூகலத்தைத் தாமும் பார்த்துக் களித்துக் கொண்டு, அங்கங்கே அறிமுகமான முகம் தென்பட்ட போதெல்லாம் ஏதேனும் வேடிக்கையாகப் பேசிக் கொண்டு, மெள்ள மெள்ள யானையைச் செலுத்திக் கொண்டு போனார். வீதி வலம் முடிந்து அரண்மனைக்குத் திரும்புவதற்குள் மாலை மயங்கி முன்னிரவு வந்து விட்டது. வானத்து விண்மீன்களுடன் வீதிகளில் ஏற்றிய தீபங்கள் போட்டியிட்டுப் பிரகாசித்தன. அரண்மனை மேலேயிருந்து மலர் மாரி பொழிந்தது. ''யானைப் பாகா! யானைப் பாகா!'' என்று ஓர் இனிய குரல் கேட்டது. பொன்னியின் செல்வர் அண்ணாந்து பார்த்த போது வானதியின் புன்னகை மலர்ந்த முகம் அங்கே தோன்றியது.

''பெண்ணே! அஞ்ச வேண்டாம்! மதுராந்தக உத்தமச் சோழரின் தர்ம இராஜ்யத்தில் யானையும் புலியும் கலந்து உறவாடும்; பூனையும் கிளியும் கொஞ்சிக் குலாவிக் குதித்து மகிழும்!'' என்றார் பொன்னியின் செல்வர்.

(தொடரும்)

---

**வீட்டுக்காரர்: செருப்பைக் குடுங்க தைச்சுத் தர்றேன்றியே; அதெப்படி என் செருப்பு பிய்ஞ்சு இருக்குன்னு உறுதியாக் கேட்கிறே?**

**செருப்புத் தைப்பவர்: போன தடவை இந்தப் பக்கமாப் போனப்ப, 'இந்தத் தடவை ஃபெயிலானே, செருப்புப் பிஞ்சுடும்'னு உங்க பையனை மிரட்டிக்கிட்டிருந்தீங்களே! அதான்...!**

— மேல்மங்கலம் பத்ரா.



# சௌம்யாவின் மறுபக்கம்



மிகச் சன்னமான உறுமலுடன் ஏஸி இயங்கிக் கொண்டிருக்க, ஃபைலில் மூழ்கிப் போயிருந்தான் கேசவன். மேஜை மீதிருந்த டெலிபோன் சிணுங்கியது.

ரிஸீவரை எடுத்தான்.

''சார்! உங்க மாமனார் உங்களைத் தேடி வந்திருக்கார்,'' ரிசப்ஷனிஸ்ட்டின் சாக்லேட் குரல்.

மாமனாரா? இங்கே ஏன்? கேசவன் குழம்பினான்.

''வரச் சொல்,'' ரிஸீவரை வைத்தான்.

சௌம்யாவைக் கல்யாணம் முடித்து ஒரு வருடம் ஓடிவிட்டது. இதுவரை சௌம்யாவின் அப்பா கேசவனைத் தேடி வந்ததில்லை. ஆனால் இன்று அவனைத் தேடி ஆபீஸுக்கே வந்திருக்கிறாரென்றால்...? கேசவன் மறுபடி குழம்பினான்.

கதவு திறந்து சாம்பசிவம் நுழைந்தார்.

கேசவன், ''வாங்க மாமா!'' என்று சொல்லி எழுவதற்குள் அவன் மேல் பாய்ந்தார். அவன் சட்டைக் காலரை ஆவேசத்துடன் பற்றிக் கொண்டார்.

''ராஸ்கல்! இனி மாதிரி என் பெண்ணை வளர்த்தேண்டா. உனக்கு எவ்வளவு நெஞ்சழுத்தம் இருந்தா பெல்ட்டால் அவளை ரத்தம் கன்னிப் போற அளவுக்கு அடிச்சிருப்பே? சௌம்யா அனாதை இல்லைடா. அவ அப்பன் நான் இருக்கேன்...'' கேசவனின் கன்னத்தில் அறைந்தார்.

கேசவனுக்கு ஏதும் புரியவில்லை.

''மாமா! உங்களுக்கு என்ன பைத்தியமா?''

கே. கந்தவேல்

''பைத்தியம் எனக்கில்லைடா. உனக்குத் தான். பணப்பைத்தியம் பிடிச்சுத்தானே என் பொண்ணைத் தினம் தினம் சித்திர வதை பண்றே?''

''என்ன சொல்றீங்க? சௌம்யாவை நான் சித்திரவதை பண்றேனா?''

''டேய் படுபாவி! கால் காசு கூட வரதட்சணை வேணாம்னு சொல்லித்தானே என் பொண்ணைக் கட்டிக்கிட்டே? அப்புறம் ஏண்டா அவளைப் பணம் கேட்டுத் தொந்தரவு பண்றே?''

கேசவனுக்குக் கோபம் வந்தது. சட்டைக் காலரை அவரது பிடியிலிருந்து உதறிக் கொண்டான்.

''யார் சொன்னது?''

''என் பொண்ணே எழுதியிருக்காடா?''

சட்டையிலிருந்து நான்காய் மடித்த ஒரு இன்லண்ட் லெட்டரைக் கேசவனின் முகத்தில் விட்டெறிந்தார். கேசவன் அவசரமாய்ப் பொறுக்கி எடுத்துப் பிரித்தான்.

அன்புள்ள அப்பாவுக்கு!

உங்கள் துரதிர்ஷ்ட மகள் சௌம்யா எழுதிக் கொள்வது: இப்பவும் இங்கே இவரது துன்புறுத்தல்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகிறது. ஸ்கூட்டர் வாங்க உங்களிடம் பணம் கேட்டு அனுப்பச் சொல்லித் தினம் தினம் தொந்தரவுதான். (இப்போதுள்ள ஸ்கூட்டர் ரொம்பப் பழையதாகி விட்டதாம்.) பணம் கேட்டு நேற்று பெல்ட்டை உருவி ரத்த விளாறாய் வீறிவிட்டார். இப்போது தலை தூக்க முடியாத அளவுக்குக் காய்ச்சல். மிகுந்த சிரமத்தின் பேரில்தான் இந்தக் கடிதம் எழுதுகின்றேன்.

இதுவரைக்கும் சிறுகச் சிறுகப் பணமாகவே அறுபதாயிரத்துக்கும் மேலாக எனக்காக இவருக்குத் தாரை வார்த்து விட்டீர்கள். கஷ்டத்தோடு கஷ்டமாய் இன்னும் ஒரு பதினைந்தாயிரத்துக்குத் தயவு செய்து செக் அனுப்பி வையுங்கள்.

அப்பா! தயவு செய்து என்னைப் பார்க்க நீங்கள் வரவேண்டாம். நான் படும் அவஸ்தைகள் எதுவும் உங்கள் கண்களில் படவேண்டாம். நீங்கள் நேரில் வந்தால் அதற்கு வேறு தனியாக நான் இவரிடம் அடி வாங்க நேரிடும்.

தங்கள் தபாலை ஒவ்வொரு வினாடியும் ஆவலாய் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்...

தங்கள் அன்பு மகள்,
சௌம்யா.

கேசவன் படித்து முடித்து நிமிர்ந்தான். நிச்சயம் இது சௌம்யாவின் கையெழுத்துத்தான். ஆனால் இதென்ன? இப்படிக் கலப்படமில்லாத பொய்க் கடிதம் எழுதியிருக்கிறாள்?

# மௌனம் சம்மதம்

படத்துக்கு என்ன தலைப்பு வைப்பது, என்று எவருமே யோசிக்கவில்லை போலும். கதை முடிந்து வணக்கம் போடும் முன்னர் மம்முட்டியும் அமலாவும் இணைந்து காரில் வரும்போது, 'என்னோடு டில்லிக்கு வருவாய் தானே?' என்கிற மாதிரி மம்முட்டி கேட்க, அமலா நாணித் தலைகுனிய, 'மௌனம் சம்மதம்,' என்று முன்னவர் சொல்ல, 'பிடிபிடி அதுதான் தலைப்பு,' என்று போட்டுவிட்ட மாதிரி இருக்கிறது!

மம்முட்டி நடித்திருக்கும் முதல் தமிழ்ப் படம். அறிமுகக் காட்சியிலேயே 'அப்ளாஸ்' அரங்கை நிறைக்கிறது.

கொலைக் குற்றம் சாட்டப்பட்டுச் சிறைக்குச் செல்லும் ஜெய்சங்கருக்கு வசனம் பேசும் சந்தர்ப்பங்கள் அதிகம் இல்லை. சோக முகம் காட்டித் துக்கிப்பதோடு சரி. என்றாலும் அனுபவம் அனுதாபத்தைப் பெற்றுத் தந்து விடுகிறது.

ஜெய்சங்கரைப் பழிவாங்கக் காத்திருக்கும் நாகேஷ், அரசியல் செல்வாக்கு மிகுந்தவர். வாய்ப்பு சரியாகக் கிட்டும்போது அந்தச் செல்வாக்கைப் பயன்படுத்திக் கொலைப் பழியை ஜெய்சங்கரின் மீது சுமத்தி அவருக்குத் தூக்குத் தண்டனை பெற்றுத் தரும் அளவுக்குப் பின்னணியில் இயங்கும் இரியா ஊக்கி. அலட்டல் இல்லாத நடிப்பு.

அமலாவுக்கு அதிகம் வேலையில்லை. அவர் மீது வக்கீல் மம்முட்டிக்கு ஏற்பட்டு விடும் 'இது' அமலாவின் அண்ணன் ஜெய்சங்கர் சார்பில் வாதாட வழிவகுக்கிறது. அவ்வளவுதான். மற்றபடி, மம்முட்டியின் கற்பனையில் எப்போதாவது தோன்றி ஆடிப் பாடிக் காதல் செய்வதோடு சரி.

''இப்ப என்ன சொல்றே?'' மாமா கர்ஜித்தார்.

''மாமா! சௌம்யாவா இப்படி எழுதினான்னு என்னால் நம்பவே முடியலை.''

''அப்ப நான்தான் ஏமாத்தறேனா?''

''ஐயோ! இல்லை. இது சௌம்யாவின் கையெழுத்துத்தான். ஆனால் லெட்டரில் எழுதியிருக்கிற எந்த விஷயமும் உண்மை



நகைச்சுவை நடிகர் சார்லிக்குச் சோக மயமான பாத்திரம். நம்பிக்கையும் நாணயமும் நிறைந்த வேலையாளான அவர், ஜெய்சங்கருக்காக உயிரையே கொடுக்கக் கூடியவர். அப்படிப்பட்டவர் ஜெய்சங்கரின் தம்பி மனைவி கொலை செய்யப்படுவதில் சம்பந்தப்பட்டுவிடும் முறையும், 'ஜெய்சங்கர் குற்றவாளியில்லை' என்பதை அவர் வெளிப்படையாகச் சொல்ல முடியாமல் போய் விடுவதற்கான காரணமும் ஏற்கும் படியாக இல்லை.

ஒய். ஜி. மகேந்திரனுக்குச் சீரியஸான வேடம். ஜெய்சங்கரின் நண்பர். குடும்ப வக்கீல். நகைச்சுவைக்கு வழியில்லாத போதும், சமயங்களில் அத்தி பூத்தாற் போல் ஒரு 'பஞ்ச் லைன்' பளிச்சிடுகிறது.

பெரும் பகுதி ஃப்ளாஷ்பேக்கில் விவரிக்கப்படும் நிகழ்ச்சிகள். என்றாலும் குழப்பமில்லை. முடிவுக் காட்சியில் உண்மை வெளிப்படும்போதுதான்குழப்பமேஉண்டாகிறது, நமக்கு.

தம்பி மனைவி கொலை செய்யப்பட்டு, அவளுடைய நகைகள் அனைத்தும் அபகரிக்கப்பட்டு, கெரசின் ஊற்றி எரிக்கப்பட்டு விட்ட நிலையில் கண்டுபிடிக்கப்படும் போது அவளுடைய நகைகள் அனைத்துமே இல்லாமலிருப்பதை எப்படிக் குடும்பத்தினரில் ஒருவருமே கண்டு கொள்ளவில்லை? அதுதான் போகட்டும் என்றால், விசாரணைக்கு வரும் போலீஸ்காரர்கள் கூடவா; 'நகையணிந்திருந்தாளா, அல்லவா?' என்று ஒரு கேள்வியெழுப்பாமல் விட்டுவிட்டார்கள்?

கதையின் பலவீனமே அதுதான். அப்படியொரு கேள்வியைக் கேட்டுவிட்டால் அப்புறம் தம்பி மனைவியின் கொலைக்காக ஜெய்சங்கரைக் கைது செய்வது எப்படி? மம்முட்டிதான் தம்முடைய புத்தி சாதுரியத்தையும், சமயங்களில் தம் உடல்வலிமையையும் வெளிப்படுத்தி அவரை நிரபராதியென்று நிரூபிப்பது எப்படி?

படம் முடிந்து வெளியே வந்த போது, "ஒரு நாவலைப் படித்த உணர்வு ஏற்பட்டது," என்றார் நண்பர் ஒருவர்.

உண்மைதான். சுமாரான நாவல்.

— சி. ஆர். கே.

---

யில்லை! பச்சைப் பொய்."

"பார்த்தியா? மறுபடி ஏமாத்தறே. பார். உனக்கு மனைவியான நாளிலிருந்து என் பொண்ணு ஒருநாள்கூட சந்தோஷமா இருந்ததில்லை. ஒவ்வொரு தடவையும் உனக்காக அழுது அழுது அவ பணம் கேட்டு எனக்கு எழுதின எல்லா லெட்டர்களையும் ஊரில் பத்திரமாத்தான் வச்சிருக்கேன். கொண்டு வரணுமா?",

"வேணாம் மாமா. உங்களை நம்பறேன். கோளாறு உங்ககிட்ட இல்லை."

"அப்ப என் பொண்ணுகிட்ட இருக்குன்னு சொல்றியா? ராஸ்கல்!" மறுபடி பாய்ந்தார்.

"மாமா! விஷயம் முழுக்கத் தெரிஞ்சுக்காம வார்த்தைகளைக் கொட்டிடாதீங்க.

வீட்டுக்குப் போய்ச் செளம்யாகிட்டேயே நேரில் பேசிக்கலாம்.''

''ச்சீ! போடா! உன் வீட்டுக்கு எவன் வருவான்? இதோ பார். இனி என் மகள் மேல உன் சுண்டுவிரல் பட்டாக் கூட நான் சும்மா இருக்க மாட்டேன். ஜாக்கிரதை!'' துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு சாம்பசிவம் போய்விட, கேசவன் தலைமேல் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

மாலை. அலுவலகம் முடிந்து கேசவன் ஸ்கூட்டரை உதைத்தான்.

ஒரு பூப்போல, மென்மையாய் அரவணைக்கும் நானா உன்னை அடித்துத் துன்புறுத்தினேன்? என் மேல் களங்கம் கற்பித்து உன் அப்பாவிடம் பணம் கேட்டுக் கடிதம் எழுதுவதில் அப்படி உனக்கு என்ன லாபம்? நான் உனக்கு என்ன குறை வைத்தேன் செளம்யா? பணம்தான் உன் தேவையா?

வீட்டை அடைந்ததும் காலிங் பெல் அடித்துக் காத்திருந்தான். அடுத்த செகண்டில் கதவு திறந்து செளம்யா தன் மலர் முகத்தைக் காட்ட, கேசவன் ஆத்திரத்தில் தன் பற்களைக் கடித்தான். ஆவேசமாய் அவளைத் தள்ளி உள்ளே நுழைந்தவன் பளீரென அவளைக் கன்னத்தில் அறைந்தான்.

செளம்யா துடித்துப் போய்க் கீழே விழ, கேசவன் அவள் தலைமயிரைக் கொத்தாய்ப் பற்றி எழுப்பி நிற்க வைத்தான்.

''என்னங்க ஆச்சு உங்களுக்கு? ஏன் இப்படியெல்லாம் நடந்துக்கறீங்க?''

''ச்சீ! வாயை மூடு. இத்தனை நாள் தாம்பத்தியத்தில் என்றைக்காவது உன்னைக் கைநீட்டி அடிச்சிருப்பேனா?''

செளம்யா கண்கள் ததும்ப வேகமாய்த் தலையை இடதும் வலதுமாய் ஆட்டினாள்.

''என்றைக்காவது உன் மனசு புண்படற மாதிரி ஒரு வார்த்தை பேசியிருப்பேனா?''

செளம்யா மறுத்தாள்.

''பின்னே ஏண்டி உன் அப்பாவுக்கு, இப்படி ஒரு லெட்டர் எழுதினே?'' சட்டைப் பையிலிருந்து கடிதத்தை எடுத்து வீசினான்.

''லெட்டரா...? அது... வந்து...'' செளம்யா தடுமாறிப் போனாள்.

''அப்படி என் பெயரைப் பாழ்படுத்திப் பணம் வாங்கணும்னு உனக்கு என்ன அவசியம்? சொல்லு. இதுவரைக்கும் என்னையும் உன் அப்பாவையும் ஏமாத்தி எத்தனை பணம் சம்பாதிச்சிருக்கே? சொல்லு.''

''ஐயோ!'' செளம்யா முகத்தை மூடிக் கொண்டு கதறினாள்.

''சொல்லு. அத்தனை பணத்தையும் என்ன செஞ்சே?''

''சொல்லிடறேங்க. சொல்லிடறேன். அப்பாவுக்குத் தாராளமா வருமானம் வருது. ஆனால் அத்தனை வருமானத்தையும் சீட்டாட்டத்திலும் குடியிலுமாத் தொலைச்சிடறார். என் தங்கச்சி கல்யாணத்துக்குப் பணம் சேமிக்கணுமேன்னு அவருக்குத் துளிக் கூட அக்கறையில்லை. எனக்கு வரதட்சணையே வாங்காத ஒரு நல்லவர் நீங்க கிடைச்ச மாதிரி, என் தங்கச்சிக்கும் ஒரு நல்லவன் கிடைப்பான்னு என்ன நிச்சயம்? ஆனால் அப்பாவுக்கு இதெல்லாம் புரிய மாட்டேங்குது. அதனால்தான் நீங்க என்னைப் பணத்துக்காகச் சித்திரவதை பண்ற மாதிரி அடிக்கடி அப்பாவுக்கு லெட்டர் போட்டுப் பணம் வரவழைச்சேன். ஆனால் அதில் ஒரு பைசாக் கூட நான் எடுத்ததில்லை. அத்தனையையும் என் தங்கச்சி பேரிலேயே பேங்கில் டெபாசிட் பண்ணியிருக்கேன். அம்மா இல்லாத என் தங்கச்சிக்கு நான்தானே அம்மா மாதிரி? அவள் கல்யாணத்துக்குப் பணம் சேமிக்க இதைவிட்டா எனக்கு வேறே வழி தோணலை. நான் பண்ணினது தப்பாங்க?'' அழுகையில் உதடு துடிக்கக் கேட்டாள் செளம்யா.

கேசவன் அவளை இழுத்து அணைத்துக் கொண்டான்.

---



மானேஜர்: ஏன்யா, இப்படி வீட்டுக்குப் போகப் பறக்கிறே?

குமாஸ்தா: என் மனைவி சாப்பிடாமல், எனக்காகக் காத்துக்கிட்டிருப்பா, சார்.

மானேஜர்: இந்தக் காலத்திலேயும் இப்படி ஒரு பெண்ணா... ஆச்சரியமா இருக்கே?

குமாஸ்தா: பின்னே, நான் போய் சமைத்துப் போட்டாத்தானே அவ சாப்பிட முடியும்!

— வி. ரேவதி.

# மணல்வெளி மான்கள்

## 26

''யார் புகார் கொடுத்திருக்காங்க சார்?''

''நித்யாவோட அப்பா!''

கௌதம் வேதனைப்பட்டான். அவரை அவனுக்கு நன்றாகத் தெரியும். அவன் மீது அவர் நல்ல மதிப்பு வைத்திருப்பவர். இப்படியெல்லாம் தான் செய்ய மாட்டேன் என்று அவருக்குப் புரியவில்லையோ?

''நாளைக்கு நான் ஸ்டேஷனுக்கு வரட்டுமா, சார்? ஸ்டேட்மெண்ட் மாதிரி எது வாச்சும் எழுதித் தரணுமா?''

''ஸ்டேட்மெண்ட் தேவைன்னா வாங்கிக்கறேன். அதுக்கு முன்னாடி, அது நிஜந் தானா, சொல்லு?''

''அவ மேஜராயிட்டா சார்!''

''ஸோ, அவர் குடுத்த கம்ப்ளெயிண்ட் உண்மைங்கிறியா?''

''மேஜரான ஒரு பெண் தான் விரும்பின ஒருத்தனோட வீட்டை விட்டு வெளிவரச் சித்தமானா அது எப்படிக் கடத்திக்கிட்டுப் போறதாகும்?''

இன்ஸ்பெக்டர் பாக்கெட்டில் கைவிட்டு ஒரு சிகரெட் எடுத்துப் பற்ற வைத்தார்.

''அது உண்மையா இல்லையான்னு நான் சொல்லணுமா சார்? யூ நோ மீ...''

''உன்னை முழுசா எனக்குத் தெரியாது! தெரிஞ்சிருந்தாலும் அது பர்ஸனல். நான் இன்ஸ்பெக்டர். கம்ப்ளைண்ட் வந்திருக்கு. விசாரிக்கிறது என் டூட்டி.''

இவருக்குத் தாம் இன்ஸ்பெக்டர் என்பது எப்போதும் கவனமிருக்கிறது என்று நினைத்தான் கௌதம். கோபம் வரவில்லை. வருத்தம்தான்.

தன் அந்தரங்கத்தைக் கூண்டிலேற்றி வாக்குமூலம் தர நேர்கையில் வருகிற லஜ்ஜை. அதன் தரத்தைத் தாழ்த்த நேர்ந்த வருத்தம்.

''வி ஆர் இன் லவ்.''

''அது தெரியும்.''

எப்படி என்று கேட்க வாய் வந்தது. அனாவசியம். தவிர்த்தான்.

''நான் எதுக்கும் காத்திருக்கிறவன் சார். அவளும்.''

இன்ஸ்பெக்டர் சிகரெட் சாம்பலைத் தட்டினார்.

''எனக்குன்னு சில ஒழுக்க நியதிகள் உண்டு. அவளுக்கும்.''

அவர் மௌனமாகச் சிகரெட்டை உறிஞ்சினார்.

''நாங்க ரெண்டு பேரும் அந்த நியதிகளை மதிக்கிறோம். சொல்லப் போனா அந்த மதிப்பீடுதான் எங்க ரெண்டு பேருக்கும் மத்தியிலே முக்கியமான பந்தம்.''

இன்ஸ்பெக்டர் குறுக்கிடவில்லை. அவனைப் பேச விட்டார். தூரத்தில் ஒரு ரயில்வே ஸ்டேஷனில் தொடர்பில்லாத ஒருவரிடம் தன் சுய வெளியீடு நிகழும் தன்னுணர்வு எழுந்தது. எனினும் வெளியிட்டாக வேண்டும். ஆகவே தொடர்ந்தான்.

''நாங்க ஓட மாட்டோம் சார். சந்திப்போம். எந்தப் பிரச்னை வந்தாலும். அவங்க கம்ப்ளெயிண்ட் பிரகாரம் அவளைக் கடத்தற முயற்சிதானே?''

''நகைகளோட.'' இன்ஸ்பெக்டர் திருத்தினார்.

அவனுக்குள் ஒரு கசப்பு முட்டிற்று. 'சே! தம் பிடிவாதத்திற்காக மனிதன் எவ்வளவு கீழ்த்தரமாக இறங்கிப் பொய் சொல்கிறார்?'

அவனுக்குப் பலாச்சுளையும் மல்லிகையும் கவனத்திற்கு வந்தன.

''இதை நீங்க நம்பலேன்னு எனக்குத் தெரியும். ஆனா ஸ்டேட்மெண்ட் மாதிரி சொல்றேன். எழுதி வேணும்னாலும் தர்றேன். எனக்கு முக்கியம் அவள் தவிர மீதியெல்லாம் குப்பை சார்!''

தாம் உணர்ச்சிவசப்பட்டிருப்பதாக இன்ஸ்பெக்டர் நினைக்கலாம். எனவே கௌதம் மீண்டும் நிதானமாக உணர்ச்சியின் சலனம் ஒடுங்கிய தெளிவோடு சொன்னான்.

''மீதியெல்லாம் குப்பை. ஐ மீன் இட் சார். எனக்கு மட்டுமில்லே. அவளுக்கும் அதெல்லாம் அப்படித்தான். ஒரு குண்டுமணி பொன்னைக் கூட — ஒரு வேளை அவ வீட்டை விட்டு வெளியே வர்றதானா — கொண்டு வர மாட்டா. அவளுக்கு என் மேலேயும் தன் மேலேயும் அவ்வளவு நம்பிக்கை உண்டு சார்!''

இன்ஸ்பெக்டர் புகைத்து முடிந்த சிகரெட்டைத் தம் ஷூவால் மிதித்துத் தேய்த்தார்.

''நாங்க காத்திருப்போம். அதான் எங்களோட ஒரே பலம்.''

''நாளைக்கு ஸ்டேஷனுக்கு அவங்கப்பாவை வரச் சொல்றேன். என் முன்னாடி இதை அவருக்குச் சொல்லிடு.''

**வையவன்**

''ஆல் ரைட் சார்.''

இன்ஸ்பெக்டர் மௌனமானார். சிறு நெடுமூச்சுக்குப் பின் பேசினார்.

''நீ ஜெயிக்கிறது சிரமம் கௌதம்!''

''ஆதி கேஸா... நித்யா விவகாரமா? எதைச் சொல்றீங்க?''

''பொதுவா... உன் வாழ்க்கையை.''

கௌதம் சற்று நிதானித்தான். அவர் வார்த்தைகள் இதயபூர்வமாக, அனுதாபத்தோடு வந்தனவென்று புரிந்தது. அதற்குப் பதிலளிக்க வேண்டியதுதான் இங்கிதம்.

''ஜெயிக்கிறது ஒண்ணுதான் முக்கியமா சார்?''

''தோற்கிறதைவிட.''

''ஐ டிஃப்பர் வித் யுவர் வியூஸ்.''

ஒரு கருத்து யுத்தம். தவிர்த்து விடலாமா?

''இப்ப அப்படித் தோணும். நாளைக்கு எப்படிங்கிறது வேற. இப்போ ஜெயிக்கிறதுக்காக எந்தச் சமரசமும் பிடிக்கலே. அநீதிகளோட — அக்கிரமங்களோட — வெளிப்பகட்டோட செய்ற சமரசத்தைவிடத் தோல்வி மேல்.''

''ஐ பிட்டி யூ.''

''தாங்க்யூ சார். உங்க இரக்கத்துக்கு நன்றி. எனக்கு அது தேவையில்லேன்னாலும் சரி.''

இன்ஸ்பெக்டர் சட்டென்று குறுக்கிட்டார்.

''என் இரக்கம் மரியாதை கலந்தது கௌதம். இது வேற மாதிரி உலகம். வேற மாதிரி காலம்.''

''சர்வ நாஸ்தின்னு சொல்ல வர்றீங்களா?''

''அப்படி நெனைக்கலே... நான்... நான் எப்படி அப்படி நெனைக்க முடியும்?''

ஒரு சிறு விசும்பல். இன்ஸ்பெக்டரிடமிருந்து. கௌதம் அதிர்ந்து விட்டான். அவரிடமிருந்து இதை எதிர்பார்க்கவில்லை. ஒரு நிமிஷம் இல்லை. சில விநாடிகள். கேட்டது விசும்பலா என்று சந்தேகப்படுகிற வேகத்தில் அவர் அதைச் சமாளித்து விட்டார். சட்டென்று கைக்குட்டை எடுத்து முகம் துடைத்தார்.

''பிலோமினா இருக்கிறப்ப... நான் எப்படி வேறு விதமா சர்வநாஸ்தின்னு முடிவு கட்ட முடியும்?''



பிலோமினா இப்படியானதில் இன்ஸ்பெக்டருக்கு இவ்வளவு துக்கம் இருக்கக்கூடும் என்று அப்போதுதான் அவனுக்குப் புரிந்தது.

''அவ தைரியமானவ. தெளிவானவ.''

''ம்ம்ம்...''

அவர் நெடுமூச்செறிந்தார்.

கௌதம் அவர் முகத்தைப் பார்த்தான்.

ஒரு மேகம் விலகிய மாதிரி அவர் முகம் மீண்டும் தெளிவாயிற்று.

''வயசானா எல்லாம் மாறிடும். நீ மாற மாட்டேன்னா, ரொம்ப ரொம்பச் சிரமப் படணும்.''

''மாறிட்டு நமக்குள்ளே நாமே ரொம்ப ஃபில்தியா உணர்றதைவிடச் சிரமம் பரவா யில்லே சார்... ஒரு பைபிள் வாக்கியம் ஞாபகம் வருது...''

''நீ பைபிள் கூட வாசிப்பதுண்டா?''

''அடிக்கடி வாசிப்பேன்.''

''ஐ ஸீ... என்ன வாக்கியம் சொல்லு?''

''உப்பானது சாரமற்றுப் போனால் அது குப்பையிலே கொட்டப்படும்.''

அவர் ஒரு கணம் எதுவும் பேசவில்லை. சற்றுப் பொறுத்து, ''எங்கே மறுபடியும் சொல்லு.'' என்றார். அவன் மீண்டும் சொன்னான்..

எங்கோ ஒரு போலீஸ் விசில் ஓசை கேட்டது. ஒரு லாரியின் உறுமலும் அதுவும் ஒன்றை ஒன்று தொடர்ந்து இறுதியில் அந்த லாரியின் எஞ்சின் ஓசை நின்றது.

''ஆல்ரைட்... நான் பொறப்படணும். இந்த மாதிரி இருட்டிலே உட்கார்ந்திருக்காதே கௌதம்!'' என்று சொல்லிவிட்டு மளமளவென்று நடக்கத் தொடங்கினார் இன்ஸ்பெக்டர். அவரது பூட்ஸ் ஓசை பதற்றத்தோடு ஸ்டேஷனைக் கடப்பதாக அவனுக்குத் தோன்றிற்று.

பத்து நிமிடங்கள் கழித்துச் சிங்காரம் வந்தான்.

''ரொம்ப நேரம் காக்க வச்சிட்டேனா மரிகப் புள்ளே...?''

''இல்லல்லே.''

காலி மாட்டு வண்டியில், சுமை நீங்கிய சந்தோஷத்தில் மாடு ஓடும் ஓட்டத்தில், நிலா இரவில் அந்தப் பயணம் நன்றாயிருந்தது. மனசு நித்யாவின் அப்பா கொடுத்த புகாருக்கும் வரும்போது சிங்காரம் சொன்ன காவல் தகவலுக்குமாக ஊசலாடியது.

துளசிங்கம்தான் விளையாடுகிறான். நித்யாவின் அப்பா அவன் கைப்பிடியில் எங்கோ சிக்கி விட்டிருக்கிறார். அவன் இழுத்த இழுப்புக்கு இப்படித் தடுமாறி விழுந்து கொண்டிருக்கிறார்.

''சீட்டுப் பணத்தை வாங்கிட்டியா?''

''வாங்கிட்டேன் மரிகப்புள்ளே. மடி கனக்குது.''

வண்டி அன்னவாசலை நெருங்கும்போது, கண்ணைக் குருடாக்குவது போல் எதிரில் ஒரு மோட்டார் சைக்கிள் வெளிச்சம் வேகமாய் நெருங்கி வந்தது.

சிங்காரம் வண்டியை இடதுகைவாக்கில் ஓட்டினான். மோட்டார் சைக்கிள் அவர்கள் வண்டியைக் கடந்து போய்விடும் என்று தான் கௌதம் எதிர்பார்த்தான்.

மோட்டார் சைக்கிளின் வேகம் தணிந்து விளக்கொளி மங்கியது. எஞ்ஜின் மட்டும் இரைந்து கொண்டிருக்க மோட்டார் சைக்கிள் நின்றது.

நிலா வெளிச்சத்தில் அது துளசிங்கத்தின் புல்லட் என்று புலப்பட்டது. அவன் தான் ஓட்டி வந்தான். பின்னால் உட்கார்ந்திருந்தவன் இறங்கிக் கையாட்டினான். சிங்காரம் மூக்கணாங்கயிற்றை இழுத்துப் பிடித்தான்.

துளசிங்கம் வண்டியில் அமர்த்தலாக உட்கார்ந்திருக்க, இறங்கியவன் விசாரித்தான்.

''யாருதுய்யா வண்டி?''

''என் வண்டிங்க.''

''யார் நீ?''

''சிங்காரங்க.''

''ஓ... சிங்காரமா... வண்டி எங்கேர்ந்து வருது?''

''பூந்துறையிலேர்ந்து.''

''ஸ்டேஷனா... மலைரோடா?''

''மலைரோட்டிலேதான் நெல்லு மூட்டை எறக்கிட்டுத் திரும்பறேன்.''

''எப்போ பொறப்பட்டே?''

''அரை மணி நேரம் ஆயிருக்கும்.''

''ரோட்டோரம் போலீஸ்காரங்க நின்னுக்கிட்டு இருந்தாங்களா?''

''இருந்தாங்க. என்னைக் கூட மடக்கி என்னா மூட்டைன்னு விசாரிச்சாங்க. நான் எறக்கிட்டுத் திரும்பறப்போ போலீஸ் விசில் கேட்டுச்சு. ஒரு லாரியை மடக்கிட்டு நின்னாங்க.''

''இன்ஸ்பெக்டர் இருந்தாரா?''

''ஸ்டேஷனுக்காருந்து மோட்டார் சைக்கிள்ளே அவரு வந்தாரு.''

''வேணு... வண்டியிலே ஏறு'' என்று குரல் கொடுத்தான் துளசிங்கம்.

புளியமர நிழல் கவிந்ததால் கௌதமின் முகம் தெரியவில்லை. அவர்கள் அவசரத்துக்குக் கூட உட்கார்ந்திருப்பது யாரென்று விசாரிக்கத் தோன்றவில்லை.

வண்டியை மோட்டார் சைக்கிள் வேகமாகக் கடந்து சென்றது.

''தா.. ஹாய்...'' என்று மாட்டு முதுகின் மேல் உரக்கத் தட்டினான் சிங்காரம். வண்டி நகர்ந்தது.

''காபரா ஆய்ட்டேன் மரிகப்புள்ளே.''

முதலில் சிங்காரம் சொன்னதில் கௌதம் மனசு பதியவில்லை. துளசிங்கம் ஏன் போலீஸ் நின்றதா என்று விசாரிக்



''என்ன சார், கால்ல இவ்வளவு பெரிய கட்டு? ''

''ஒன்றுமில்லை. தூங்கும் போது மரடோனாவைப் போல் ஃபுட்பால் விளையாடுற மாதிரி கனவு...''

— சரவண குமார்.

கிறான் என்று கேள்வியில் குத்தி நின்றது.

''சீட்டுப் பணத்தோட விஷயம் தெரிஞ்சு வழியிலே மடக்குறானுங்கண்ணு வெல வெலத்துட்டேன்.''

''நான் தான் கூட வந்துட்டிருக்கனே.''

''அது சரி... கையிலே ஏதுனா ஆயுதம் வச்சிருந்தானுங்கன்னா...?''

''ஆயுதம் இருந்தா என்ன...? வண்டி கூட்டத்தடியைப் பிடுங்கி நாலு போடு போட்டுக் காப்பாத்த மாட்டேனா?''

''நீயா?''

''என்ன நீயான்றே?''

''இல்லே ஆச்சரியமா கீதே... உன்னை இதே ரோட்டுலே ஒதிச்சானுங்க. வாங்கிக் கினே... இப்ப கூட்டத்தடியைப் பிடுங்கி அடிப்பேன்றே?''

''அது வேறே... இது வேறே சிங்காரம்.''

''அப்பிடியா?''

''புரியலே இல்லே. நான் ஒனக்குக் காவலுக்கு வந்திருக்கேன். நீ என்னை நம்பிக் கூட்டிகினு வர்றேன்னுதான் இதுவரிக்கும் நெனைக்கிறேன்.''

''நான் அதுக்குச் சொல்லலே மரிகப் புள்ளே.''

''எதுக்குச் சொன்னியோ...?இப்போகேட்டுக்கோ. வழித் துணைக்குக் கூப்பிட்டா உயிர் முக்கியமில்லே. கௌதமின் குரலில் தொனித்த உறுதி சிங்காரத்தைச் சற்று மௌனமாக்கிற்று.

வண்டி மௌனமாய் ஓடியது.

''இவ்ளோ தில்லோட இருக்கிற புள்ளே, சீமான் மாதிரி மீசை மேலே கைபோட்டுக் காவல்ல இருக்கிற பொண்ணை இட்டார வேணாமா?''

கௌதம் சற்று முன் இன்ஸ்பெக்டருடன் பேசியதை நினைத்துக் கொண்டான். சிங்காரத்துக்கு அது புரியாது. தேவையுமில்லை.

''ஆமா சிங்காரம். இவனுங்க நான் வண்டியிலே உட்கார்ந்திருந்ததைக் கண்டுக்கவே இல்லியே?''

''இல்லே... நீ போய் ஏன் வண்டியிலே வர்றேன்னு நெனைச்சானுங்களோ... கண்டுக்கவே இல்லியோ!''

''எங்கே இப்படி ப் பதறிக்கிட்டு ஓடறானுங்க?''

''அண்ணாத்த இப்ப பெரிய தொளில்லே எறங்கிட்டான்.''

''என்னது?''

''சந்தனக்கட்டை லோடுதான்.''

கௌதம் விழிப்புற்றான். இவனிடம் தான் இன்ஸ்பெக்டரை ஸ்டேஷனில் சந்தித்ததைச் சொல்லவில்லை. நல்லதுதான்.

''வர்றப்ப நான் சொல்லிக்கினு வரலே, ஒரு எக்ஸ்ட்ராவை இட்டாந்து வூட்டிலே வச்சிருந்தான்னு?''

''ஆமா.''

''அவ ஆந்திராக்காரி! ஆந்திரா பார்டர்லே ஒரு பினாமி பேரிலே தொளசிங்கம் ஒரு ஸாமில் வாங்கியிருக்கான். இவதான் மேனேஜ்மெண்ட்.''

சில நாட்களுக்கு முன் ரஞ்சிதத்தைத் துளசிங்கத்தின் கரும்பாலை நிர்வாகத்தில் சந்தித்தது நினைவுக்கு வந்தது. கௌதம் பற்களைக் கடித்துக் கொண்டான்.

இவனுக்கென்று பெண்கள் கிடைக்கிறார்கள்! இரையாகிவிட. தேய்ந்து மாய. உருக்குலைந்து மனமுடைய.

''ஸா மில் வாங்கி?'' அவன் பேச்சை நெம்பி விட்டான்.

''லாரி லோடு அங்கே பூடும். ரெண்டு நாள் மூணு நாள்லே பீஸ் பீஸா வெட்டி அழகா பேக் பண்ணிடுவாங்க. இல்லே பவுடராக்கிடுவானுங்க. அப்படியே வெளிநாட்டுக்குப் பூடும்.''

இன்ஸ்பெக்டர் இருந்தாரா என்று அவன் விசாரித்ததைக் கௌதம் நினைவு கூர்ந்தான்.

இன்ஸ்பெக்டரிடம் இவனுக்கு என்ன செல்வாக்கு? மாசிலா கொலையுண்டது இவனால்தான் என்று அவருக்குத் தெரியாமலா இருக்கும்? ஆதியைக் கைது செய்தது, நான் பெய்லபின் செக்ஷனில்போட்டது எல்லாம் அவரே தீர்மானித்ததா? துளசிங்கத்தின் தூண்டுதலா?

எதையும் தீர்மானிக்க முடியவில்லை. இன்னும் ஊர் போற்றுகின்ற நல்ல இன்ஸ்பெக்டராக, பிலோமினாவின் அண்ணனாகத்தான் மனம் இருதயராஜை மதிக்கிறது! அதே மதிப்பீட்டில்தான் வெள்ளையாகப் பேசத் தோன்றுகிறது.

''இன்ஸ்பெக்டரை நீ பார்த்தியா சிங்காரம்?''

''ஆமா மரிகப்புள்ளே... சும்மா டகுல்னு நெனைச்சியா...? நெஜம்மா... ஸ்டேஷன் லேருந்து அவரு வண்டி வந்துதே?''

''இவன் ஏன் குறிப்பா அதைக் கேக்கறான்?''

''இவனுக்கு அந்த இன்ஸ்பெக்டர் தோஸ்து,'' என்றான் சிங்காரம்.

(தொடரும்)



• V. ABI — Colour Photo: RAJA PONSINGH.

மத்யமர்: சாட்சி
— வாசகர் விமர்சனம்

# சிறுகதைப் போராளி சுஜாதா!



### பொறுப்பவள் பதுங்குபவள் அல்ல!

பொறுமை பயமாகாது! பயத்திற்குப் பொறுமை கிடையாது! சரளா — பொறுப்பவள்; பதுங்குபவளல்ல. உலக வெளிச்சக் கீற்று கூடக் காணாத பேதை மனம், 'உயிர்க் கொலை' எனும் மின்னல் வெட்டு தாக்கும் போது பயமுறுவது இயற்கை; பிறகு மெல்ல மெல்லத் துளிர்விடும் துணிச்சல். உண்மையைப் பிணமாக்கி நெஞ்சில் சுமந்து பதுங்குவதை விட, உண்மைக்கு ஆதரவளித்து ஊர்வலம் வருவது உத்தமம் என்கிற தத்துவத்தின் 'சாட்சி' சரளா. அனுதாபம் ஏற்படுத்தும் பாத்திரப் படைப்பு.

— வ. பாலா சுப்ரமணியம், சென்னை — 91.

### நாமும் அந்தக் காலனியில்...

அமீர்பாய் மளிகைக் கடை. அதனருகே ஒரு பேக்கரி, ஒரு எலக்ட்ரிக் ஷாப், ஒரு பெட்டிக் கடை. அடிக்கடி புழுதி பறக்கப் பாறாங்கல் ஏற்றிச் செல்லும் மஞ்சள் லாரிகள், ராத்திரி பக்கத்து வயல் காட்டிலிருந்து கேட்கும் தவளை சப்தங்கள், டெண்ட் கொட்டகை சினிமா வசனங்கள் என்று அந்த புதுக் காலனியை சுஜாதா எவ்வளவு அழகாகச் சுருக்கமாகச் சொல்லியிருக்கிறார்! கதையைப் படிக்க ஆரம்பித்த உடனேயே நாமும் அந்தக் காலனிக்கே போய் சரளாவின் பக்கத்திலேயே நின்று, அந்தக் கொலையை நேரிலேயே பார்ப்பது போன்ற ஒரு உணர்வு. ஒரு பயம் ஏற்படுகிறது என்றால் அதற்குக் காரணம் சுஜாதாவின் இயற்கையான நடைதான்.

— சுகன்யா, மங்கநல்லூர்.

### ஒரு விதப் பழி தீர்த்தல்!

அந்த வீட்டில் உள்ள அத்தனை பேர் மீதும் சரளாவுக்கு மனத்தளவில் நிறையக் கோபம்; தன்னைச் சராசரி மனித ஜீவனாகக் கூட ஏற்றுக் கொள்ளாமல் இயந்திரத்தனமாகவே நடத்துகின்றனரே என்ற ஆதங்கம், வேலைக்காரி அளவுக்குக் கூட கருத்துச் சுதந்திரம் இல்லையே என்ற உள்ளப் பொருமல்... இவற்றின் மொத்த வெளிப்பாடே அவள் எஸ். ஐ. யிடம் தான் பார்த்ததை அப்படியே படம் பிடித்துக் காட்டுவது. இது அவளைப் பொருத்தமட்டிலும் ஒருவிதப் பழி தீர்த்தல். இனி இவள் மட்டுமின்றிக் குடும்பமே ஸ்டேஷன், கோர்ட், பேட்டி என அலைய வேண்டும்தானே. சற்று வெளி உலகைப் பார்க்க சரளாவுக்கு இதையும் விட்டால் வேறு என்னதான் வழி... இனி சமையலில்லை... துவைக்கும் வேலை இல்லை. சரளா சில நாளுக்கு நிம்மதி அடையப் போகிறாள்.

— ஆர். ரத்தினசாமி, பி. புளியம்பட்டி.



"நாட்ல லஞ்சம் தலைவிரிச்சாடு துன்னு எப்படிச் சொல்றீங்க?"

"என்னோட சம்பளத்தை என்னிடம் கொடுக்கிறதுக்குக் கேஷியர் ரகு அம்பது ரூபா லஞ்சம் கேட்கறான்னாப் பார்த்துக் கோயேன்!"

— காட்டாங்குளத்தூர் குரு.

## கடைசி வரியில் வெடிகுண்டு!

சாதாரணமாக சுஜாதா கதையின் முடிவை ஊகிக்கவே முடியாது. கடைசி வரியில் வெடிகுண்டு வைத்திருக்கும் கதைப் போராளி அவர். ஆனால் இந்தக் கதையின் ஆரம்பமே சரியான முடிவினைக் கண்டு கொள்ள வழிசெய்கிறது. அவள் 'பயந்த சுபாவம் உடையவள் என்பதும், 'பார்த்ததைச் சொல்ல மாட்டேன், சொல்ல மாட்டேன்' என்று அவள் சொல்லிக் கொண்டிருப்பதும் அவளைச் சார்ந்தவர்கள் 'சொல்லாதே சொல்லாதே' என்று வலியுறுத்திக் கொண்டேயிருப்பதும் அதிகப்படியானதாக அமைந்து, கதையின் முடிவைக் காட்டிக் கொடுப்பதாய் இருக்கிறது.

— ஜி. ஷோபா, ஹோசூர்.

## தீயில் முளைத்தது...

'தீயில் முளைத்தது வெயிலில் வாடுமா' என்பது மலையாளப் பழமொழி. உண்மை பேசுவது என்பது சத்தியத்திற்கும் ஆண்டவனுக்கும் ஓர் இடைப்பட்ட நிலை. உண்மை என்பது அருகே எரியும் சூரியன். சுற்றத்தார் பயமுறுத்திய போதும் கூட, வரவிருக்கும் ஆபத்தைப் பற்றி அச்சுறுத்திய போதும் கூட உண்மை சொல்லா விட்டால் வாசுவுக்கு யார் நீதி வழங்குவது என்று சரளாவின் மனம் நினைத்ததோ என்னவோ? மற்றவர்கள் அவள் அடங்கிப் போகிற சாதுப் பெண் என்று நினைக்க, சாட்சி சொல்லும் எரிமலை, தான் என்று நிரூபிக்கிறாள்.

— கிருஷ்ணராஜ் கோபால்,
சென்னை — 92.

## சாட்சிக்குப் பாதுகாப்பு இல்லை

நம் நாட்டில் கொலையாளிக்கு எதிராகச் சாட்சி சொல்பவர்களுக்குப் பாதுகாப்பு இல்லை. படித்தவர்கள், விவரம் தெரிந்தவர்கள் கூட,சாட்சி சொல்ல முன்வராததற்கும், சாட்சி சொல்பவர்களைத் தடுப்பதற்கும் இதுவே காரணம். இதைத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது இக் கதை. போலீஸ் என்றாலே சாதாரண, நடுத்தர மக்களுக்கு ஒரு பயம் தொற்றிக் கொள்வது இயற்கை. இது கதையில் கண் கூடு. சரளா, கடைசியில் உண்மையைச் சொல்லி விடுவது படு யதார்த்தம் என்றாலும் உண்மையைத் தான் சொல்வாள் என்று முன்னமே ஊகிக்க முடிகிறது. இது கதையின் பலவீனம்.

— லி. பிரேமா, நத்தம்.

## நேர்மைத் திறமிருந்தால்...

சரளாவின் அசட்டுத்தனத்தைக் காட்டும் வகையில் கதையின் நடையைக் கொண்டு சென்று, 'படு சாமர்த்தியசாலிகளாக' முயற்சி செய்யும் மற்ற பாத்திரங்களை எல்லாம் படு அசடுகளாக ஆக்கி (படிக்கும் நம்மையும்தான்) துணிந்து உண்மையைக் கூறுவதாக முடித்திருக்கும் விதம், நேர்மைத் திறமிருந்தால் எப்பேர்பட்ட கோழைகளுக்கும் கூட அசாத்தியத் துணிவு பிறக்கும் என்று உணர்த்துகிறது.

— வள்ளி நடராஜன், சிதம்பரம்.

## இயந்திர மனுஷி

சராசரிப் பெண்கள் அனுபவிக்கும் பொழுது போக்குகளும் உரிமைகளும் கூட மறுக்கப்பட்ட நிலையில் புகுந்த வீட்டாரின் கட்டளைகளுக்குப் பணியும் "எந்திர மனுஷியாக" சரளாவின் பாத்திரப் படைப்பு அமைக்கப்பட்டுள்ளது. அடக்கு முறைக்குப் பழகிப் போன சரளாவின் ஒடுக்கப்பட்ட உணர்வுகளுக்குப் பிரவாகம் ஏற்படக் காரணம், மனித நேயம்தான். அநீதி கண்டு வெகுண்டெழுந்து நீதிக்காகப் போராட வேண்டிய ஆண்களும் கூட கிருஷ்ணனைக் காட்டிக் கொடுக்கப் பயப்படும் போது அப்பாவி என்று கருதப்பட்ட சரளா அமைதிப் புரட்சிக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டு, உண்மையை ஒளிக்காமல் கூறி, தன் வீட்டாரை அதிர்ச்சியில் ஆழ்த்துவது அருமை. பெண்ணின் மனம் ஆழ்கடல் போன்றது என்பதைச் சரளா பாத்திரம் கூறுகிறது.

— வளர்மதி ஆசைத்தம்பி,
தஞ்சாவூர் — 7.

**ரூ. 50 பரிசு பெறுபவர்:**
**லி. பிரேமா,**
**மே/பா. எஸ். சந்திரஹாசன்,**
**சாமிநாதுலு செட்டியார் தெரு,**
**நத்தம் — 624 401.**

**மற்ற விமர்சனங்கள் ரூ. 25/- சன்மானம் பெறுகின்றன.**

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்தபடியே
ஓய்வு நேரத்தில் விவேகானந்தா
கல்வி நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே பின் பக்கத்திலுள்ள
எனது முகவரிக்கு தபால்
முறைப் பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப மனுவையும்
உடனே அனுப்பி வைக்கவும்.
இப்படிக்கு
எஸ். செல்வ கணேஷ்

WRITE PIN CODE IN ADDRESS

15 INDIA

SULUR

விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
9 மேட்லி ரோடு,
சென்னை PIN 600017

ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

**உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!**

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

# விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986. 9. மேட்லி ரோடு, தி. நகர், சென்னை-17.**

# உள்ளத்தில் ஒரு பேய்

அனந்தராமன் கதவைத் தட்டாமல் சற்றே திகைத்து நின்றான். காரணம் வீட்டினுள்ளிருந்து கிளம்பி வந்த சிரிப்புச் சப்தம் தான். அந்தச் சிரிப்புச் சப்தத்தில் இருந்த விசேஷம் அது ஓர் ஆண் குரலாக இருந்தது என்பதுதான். அவனுள் வியப்பு பெருகியது.

'யாராக இருக்கும்?'

அவன் காதுகளைத் தீட்டிக் கொண்டு கதவுக்கு மிக அருகே நின்று கொண்டான்.

பவானி சொல்லிக் கொண்டிருந்தாள். "அவர் வர்ற நேரந்தான். அஞ்சேகால் மணி பஸ்ஸை எப்படியும் பிடிச்சுடுவாரு. பிடிச்சு சரியா ஆறே காலுக்கெல்லாம் வீட்டில இருப்பாரு. அதைத் தவற விட்டாருன்னா, ஆறு மணிக்குப் பஸ் பிடிச்சு ஏழுக்கெல்லாம் வந்துடுவாரு."

"முக்கால் மணி நேரமா பஸ் பயணம்?"

"ஆமா."

"அப்ப உங்க வீட்டுக்காரர் வந்ததும் பார்த்துட்டே போங்குறே?"

"பின்னே? உனக்கே பார்க்கணும்னு தோணலியா?"

சில நொடிகளுக்குப் பிறகு, "நான் போய்ப் பார்க்கறேன்," என்று அவன் சொன்னதும் நாற்காலி நகர்ந்த ஓசையும் கேட்டது.

அந்த ஆணின் சிரிப்புக் குரல் மறுபடியும் கேட்டது.

"நீ போய்க் கதவைத் திறந்து பார்க்கிறதால வந்துடுவாரா? இதென்ன அசட்டுத்தனம்?"

அவளது பதில் சிரிப்பும் காலடியோசையும் கேட்க, அனந்தராமன் அப்போதுதான் வந்து நின்றவன் போன்று, கதவை வழக்கம் போல் மூன்று தரம் தட்டினான்.

பவானி கதவைத் திறந்தாள். "உங்களுக்கு ஆயுசு நூறுங்க. எங்க அத்தான் வந்திருக்கான்!"

அனந்தராமனின் பார்வை, நாற்காலியிலிருந்து எழுந்து நின்று கையுயர்த்திப் புன்சிரிப்புடன், "ஹலோ" சொன்ன அவன் அத்தான் ரகுபதியின் மீது பதிந்தது. பதிலுக்குப் புன்னகை செய்து விட்டு, "அடடே வாங்க. வந்து ரொம்ப நேரமாச்சா?" என்றான் செருப்புக்களை உதறியபடி.

"ஆமா. மூணு மணிக்கே வந்துட்டேன். சாயந்திரமா வந்திருக்கலாம். ஆனா, இங்கே பக்கத்துல ஒரு வேலையா வந்தேன். வந்தது தான் வந்தோமே அப்படியே உங்க ரெண்டு பேரையும் பார்த்துட்டுப் போகலாம்னு வந்துட்டேன்..."

"உக்காருங்க," என்று உபசரித்து விட்டு அனந்தராமன் தானும் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான்.

"ரெண்டு பேரும் பேசிட்டிருங்க. காப்பி டிபன் கொண்டு வரேன்," என்று பவானி உட்புறம் நோக்கி நகர்ந்தாள்.

"மூணு மணிக்கே வந்தவருக்கு இன்னுமா டிபன் கொடுக்காம இருக்கே?"

"இல்லீங்க. அத்தான் ப்ரெண்ட் வீட்டில ரெண்டே முக்காலுக்கு டிபன் சாப்பிட்டானாம். அதான், நீங்க வந்த பிறகு சாப்பிடறேன்னுட்டான்."

"அப்புறம்? எப்படி இருக்கீங்க...? எங்க கலியாணத்தப்ப பார்த்தது. இல்லியா? இப்ப எங்கே இப்படி...?"

"எனக்கு மெட்ராஸ் ப்ராஞ்சுக்கே டிரான்ஸ்பர் கிடைச்சுடுத்துங்க."

"அப்படியா? நீங்க கேட்டிருந்தீங்களா?"

"இல்லீங்க. அவங்களாவே மாத்திட்டாங்க."

"என்னிக்கு ஜாய்ன் பண்ணீங்க?"

"ஒரு வாரமாச்சு. ஒரு லாட்ஜ்ல ரூம் எடுத்திருக்கேன். ஒண்டிக் கட்டைதானே? நோ ப்ராப்ளம்."

"சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்குங்க."

ரகுபதி அசட்டுப் புன்னகை புரிந்தான்.

பவானி சிற்றுண்டித் தட்டுக்களைக் கொண்டு வந்து வைத்து விட்டு, "சாப்பிடுங்க. அஞ்சு நிமிஷத்துல காப்பி எடுத்தாறேன்" என்று கூறி மறுபடியும் மறைந்து போனாள்.

அதன் பிறகு இருவரும் அதிகம் ஒன்றும் பேசிக் கொள்ளாமல் சிற்றுண்டியருந்துவதில் மும்முரமானார்கள். சற்றுப் பொறுத்து பவானியும் காப்பியுடன் வந்தமர்ந்தாள்.

"நம்ம கல்யாணத்தப்ப பார்த்தது. அதனால சட்னு அடையாளம் தெரியல்லே."

"ஆமா. அத்தான் இப்பக் கொஞ்சம் குண்டா வேற ஆயிட்டான். நானே ஒரு செகண்ட் திகைச்ச பிறகுதான் கண்டுபிடிச்சேன்."

"ஊர்ல அம்மா கைச் சமையல் சாப்பிட்டுக்கிட்டிருந்தேன். இனி லாட்ஜ்தானே? அதனால பழைய உடம்பு வந்துடும்," என்று அவன் சிரித்தான்.

"நீ இங்க கூடத் தங்கிக்கலாம் — உனக்கு ஒரு வீடு கிடைச்சு அத்தையைக் கூட்டிட்டு வர்ற வரைக்கும்."

''வாசல்ல யாரோ கூப்பிடறாங்க. போய்ப் பாரு, பவானி!'' என்றான் அனந்தராமன்.

பவானி அவனைக் கூர்ந்து பார்த்து விட்டு எழுந்து போனாள். போய்க் கதவைத் திறந்து எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பி வந்து அமர்ந்து, ''யாருமில்லீங்க.'' என்றாள்.

''பின்னே கூப்பிட்ட மாதிரி இருந்திச்சே?''

பவானி பதில் சொல்லவில்லை. ரகுபதி அங்கேயே தங்கிக் கொள்ளுவது பற்றிய பேச்சு இழையறுந்து போயிற்று. அவள் முகம் சிறுத்து விட்டிருந்ததை அனந்தராமன் மனத்தில் வாங்கிக் கொண்டான். 'பின்ன என்ன? புருஷனோட சம்மதம் கேட்டுக்காம ஒரு ஆம்பளையைத் தங்கச் சொல்றது தப்புன்னு கூட இவளுக்குத் தெரியல்லியே?'

ரகுபதி தலைகுனிந்தபடி இருந்தான். விட்டுப் போனதை அவன் தொடர்ந்து, 'நீ சொன்னாச் சரிதான். வீடு கிடைக்கிற வரையில இங்கே தங்கிக்கறேன்' என்று சொல்லி விடுவானோ என்று அஞ்சியபடி அனந்தராமன் மௌனமாய்க் காப்பியைப் பருகலானான்.

மூவருமே ஒருவரையொருவர் புரிந்து கொண்டதில் அங்கே கனத்த மவுனம் குடி கொண்டது.

''ராத்திரி சாப்பிட்டுட்டே போகலாம்,'' என்று அனந்தராமன் சொல்ல வேண்டிய தாயிற்று. தான் அநாகரிகமாய் நடந்து கொண்டு விட்டது புரிந்து அதை அவர்களும் தெரிந்து கொண்டு விட்டதால் விளைந்து விட்ட இறுக்கத்தைத் தனது உபசாரம் தளர்த்தும் என்று அவன் எண்ணினான்.

''ஆமா, அத்தான். உனக்கு என்ன பிடிக்கும்? சொல்லு.''

''இல்லே, பவானி. இன்னொரு சமயம் பார்க்கலாம். நான் இவருக்காகத்தான் காத்துட்டிருந்தேன்.''

''அப்ப ஞாயிற்றுக் கிழமை வாயேன், அத்தான். இனிமே ஒண்ணு பண்ணு...'' என்று தொடங்கியவள் சட்டென்று தவறை உணர்ந்து, ''அய்யய்யோ. அடுப்பில பால் வச்சிருக்கேன்...'' என்று கூறி எழுந்து ஓடினாள்.

சற்றுப் பொறுத்துத் திரும்பி வந்ததும், 'இனிமே ஒண்ணு பண்ணேன். எல்லா ஞாயித்துக் கிழமைகள்ளேயும் சாப்பிட இங்கே வந்துடேன்' என்று தான் சொல்ல வந்த சொற்கள் சொல்லப்படாத சங்கடத்துடன், அவள் ரகுபதியின் கண்களைக் கவனமாய்த் தவிர்த்தபடி உட்கார்ந்து கொண்டாள்.

தான் தொடங்கிய பேச்சை முடிக்க முடியாமல், அவள் தவித்துக் கொண்டிருந்




சரத்குமார்: தீராத ஆசை

# ரஜினியுடன் சண்டை போடுவது எப்போ?

●● பாலம் படத்திற்குப் பின்பு டைரக்டர் கார்வண்ணனுக்கு நிறையப் பட வாய்ப்புகள் வந்து குவிந்துவிட்டன! தற்போது நடிகர் முரளியைக் கதாநாயகனாகப் போட்டு 'புதிய காற்று' என்று ஒரு படத்தை டைரக்ட் செய்கிறார். இந்தப் படத்தைத் தயாரிப்பவர் நடிகர் முரளியின் மேக்கப் மேன் அருணாசலம். 'புதிய காற்று' படத்தில் மு. க. முத்து ஒரு பாடல் பாடியுள்ளார். எழுத்தாளர் பால


ராமராஜன்: எம். ஜி. ஆர். பார்முலா

குமாரன் முக்கிய வேடமொன்றில் நடிக்கிறார்! இப்போது தயாரிப்பாளர்கள் கார்வண்ணனிடம் அட்வான்ஸ் கொடுத்துவிட்டு 'எப்போது நேரம் கிடைக்கிறதோ அப்போது படம் பண்ணிக் கொடுங்கள் போதும்!' என்றார்களாம்!

●● 'கரகாட்டக்காரன்' படத்தின் மூலம் கனகாவை அறிமுகப்படுத்தினார் கங்கை அமரன். தற்போது 'தெம்மாங்குப் பாட்டுக் காரன்' என்ற படத்தில் மீனாட்சியை அறிமுகப்படுத்துகிறார். ஒவ்வொரு படத்திலும் ஒவ்வொரு புதுமுகத்தை அறிமுகப் படுத்துவதையே வாடிக்கையாக வைத்துக்


மீனாட்சி: அறிமுகம்

கொள்ளப் போகின்றாராம் அமரன்.

●● 'புலன் விசாரணை' மூலம் பிரபலமான வில்லன் சரத்குமாருக்கு நிறைய வில்லன் ரோல்கள் வந்தாலும் கமல், ரஜினியுடன் நடிக்க வேண்டும் என்பது தான் தீராத ஆசை. கமல், ரஜினியுடன் சண்டை போட்டு (நடித்து) விட்டால் ரசிகர்களிடம் உயர்ந்த இடத்தைப் பிடித்து விடலாம் என்பது சரத்குமாரின் கணக்கு!

●● எம்.ஜி.ஆர். பார்முலாப்படி தம்முடைய ஒவ்வொரு படத்திலும் வேறு வேறு கதாநாயகிகளைப் போடுவதை ராமராஜன் வழக்கமாக வைத்துள்ளார். இந்த பார்முலாவில் வெற்றி பெற்றும் வருகிறார். இன்றைய பிரபல கதாநாயகிகள் எல்லோருமே ராமராஜனுடன் ஜோடியாக நடிக்க வேண்டும் என்றால் உடனே கால்ஷீட் கொடுத்து விடுகிறார்கள்!

— எஸ். பாலு

ததைத் தான் புரிந்து கொண்டு விட்டதை, அவள் தெரிந்து கொண்டு சங்கடப்படலாகாது என்ற எண்ணத்தில், ''ஞாயித்துக் கிழமையெல்லாம் வரவே முடியாது, பவானி. எனக்கு இங்க மெட்றாஸ்ல பல ப்ரெண்ட்ஸ். எல்லார் வீடுகள்ளேயும் முறைச் சாப்பாடு. ஒத்துண்டாச்சு. தவிர அநேகமா எல்லா ஞாயித்துக் கிழமைகள்ளேயும் எனக்கு ஆபீசுக்குப் போயே ஆகணும். என்னோட சீட் ரொம்ப ஹெவி— என்னாட்டமே. வந்து ஒரு வாரமாச்சா?

உங்க ரெண்டு பேரையும் பார்க்காம இருக்கிறது தப்புங்கிறதுக்காக வந்தேன். அப்ப நான் வரட்டுமா? வரேன், மிஸ்டர் அனந்தராமன். அப்புறம், பவானி நான் வந்ததும் வராததுமா நீ எடுத்தியே என்னோட கல்யாணப் பேச்சு, அதை மறந்துடு. சின்ன வயசிலேருந்து பழகி நான் லவ் பண்ணின லலிதா ப்ளட் கான்ஸர் வந்து சரியா கவனிக்காம செத்ததுக்கு அப்புறம் எனக்கு வாழ்க்கையே வெறுத்துப் போயிடுத்து. உனக்குத்தான் தெரியுமே... மிஸ்டர் அனந்த

ரூச்சுக்கு புதுமணம் ப்ராமிஸ், பல்லுக்கு ஆரோக்கியம் ப்ராமிஸ்.



இதுதான் ப்ராமிஸ்
டூத்பேஸ்ட்டின் பெருமையே.

ப்ராமிஸ் டூத்பேஸ்ட்டில் இரு செயல் புரியும் கிராம்பு எண்ணை அடங்கியுள்ளது. இது பல் இடுக்குகளில் புகுந்து பற்களின் வேர்களை மேலும் கிருமிகளை அழிக்கிறது. தவிர சுவாசத்தில் துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை ஒழித்து மூச்சுக்குப் புதுமணமூட்டுகிறது. கிராம்பு எண்ணை அடங்கிய டூத்பேஸ்ட் ப்ராமிஸ்






பல்சாரா—
டூத்பேஸ்ட்
நிபுணர்கள்.

Promise



CHAITRA-B BLS 961 TAM

---



பகவானுக்கும் பக்தனுக்கும்
பாலமாய் அமைந்தது.

பூஜைக்கு உகந்தது ஆயுர்வேத
வனமூலிகா தூபம் என்று
சாஸ்த்திரங்கள் சொல்லுகின்றன.
இதிலே தயாரானதுதான்

அம்பிகா ஹெவன் அகர் பத்தி
அம்பிகா தர்பார் பத்தி

42 வருடங்களாய்
புகழ் பெற்றது.

JAC




For Distributorship

அம்பிகா காம்ப்ளக்ஸ்,

32, ஆற்காட் ரோடு, சென்னை - 24. PHONE 427605 422097

ராமன். எதுக்கு உங்க முன்னாடி என் பர்சனல் விஷயம் பத்திப் பேசறேன்னா, இந்த பவானி பாட்டுக்கு உங்ககிட்டே சொல்லிப் பொண்ணும் தேடச் சொல்லிடப் போறாளேன்னுதான்," என்று சிரித்தபடி அவன் எழுந்து கொண்டான்.

புதிதாய்த் தோன்றிய மலர்ச்சியைக் கண்களிலிருந்து அகற்றிக் கொள்ள முடியாமல்; "லலிதா யாரு?" என்றான் அனந்தராமன்.

"எங்க பக்கத்து வீட்டுப் பொண்ணு. சின்ன வயசிலேருந்து பழக்கம். பவானி உங்ககிட்ட சொல்லலியா? அப்ப, என்னைப் பத்தி அவ பேசினதே இல்லையா...?"

"சேச்சே. எப்பவாவது பேசறதுதான். ஆனா, இது உங்க பர்சனல் விஷயமாச்சே? அதனால சொல்லலேன்னு நினைக்கிறேன். அப்படித்தானே பவானி?"

"ஆமா..." என்று பதிலிறுத்த பவானி மனத்துள் ரகுபதியை வெகுவாய்ப் பாராட்டிக் கொண்டாள். தன் கணவனைக் கணத்துக்குள் எடை போட்டுத் தனது வருகையால் எந்தக் கலகமும் விளைந்து விடலாகாது என்ற முன்னெச்சரிக்கையுடன், இல்லாத ஒரு பெண்ணைக் கற்பித்து, அவளுக்கு லலிதா என்று பெயர் சூட்டி, அடுத்த வீட்டுப் பெண்ணாய்க் காட்டிக் கதையளந்த தன் அத்தானின் சாமர்த்தியம் அவளை அயர்த்தியது.

"நீங்க பேசிட்டிருங்க. நான் பாத்ரூம் போயிட்டு வந்துடறேன்," என்ற அனந்தராமன் எழுந்து சென்றான்.

**அ**வன் சென்றதும் பவானியும் ரகுபதியும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். "பவானி, அத்தான்னாலே அது மாதிரியான உறவு தான் மனுசங்களுக்கு நெனப்பு வருது. நாம ரெண்டு பேரும் ஒரே குடும்பத்தில சின்ன வயசிலேருந்து சேர்ந்தே இருந்தது நெசந்தான். ஆனா அண்ணன் – தங்கை மாதிரி தான் பழகினோம். பெரியவங்க அப்படி ஒரு பேச்சை எடுத்தப்ப ரெண்டு பேரும் அதுக்கு ஒத்துக்கவே இல்லே. இல்லியா? ஆனா அதையெல்லாம் உங்க வீட்டுக்காரர் நம்பணுமே? அதான் பட்டுனு அப்படி ஒரு பொய்யைச் சொல்லிட்டேன்... எல்லாரும் பரந்த மனசு உள்ளவங்க இல்லே, பவானி. அதனால நீ உன் வீட்டுக்காரரை எண்ணி மனசைக் கஷ்டப்படுத்திக்காதே. சந்தேகம் கிறது பெரிய பேய். அது மனசில குடிபுகாம பார்த்துக்கணும். அதுக்காகத்தான் இப்படிப் பொய் சொன்னேன்..." என்ற அவன் கண்கள் கலங்கி இருந்தன.

பாத்ரூம் கதவு திறந்த ஓசை கேட்க, கண்ணீர் திமிறிய கண்களைத் துடைத்தபடி பவானி சட்டென்று சமையலறைப் பக்கம் விரைந்தாள்.



ஒரு காலத்தில் யாரும் நான்கு விரற்கடை அளவுக்கு மேல் நீளமுள்ள தாடி வளர்க்கக் கூடாது என்று இந்தியாவை ஆண்ட ஓர் அரசன் உத்தரவு போட்டிருந்தான். அவனுடைய காவல் வீரர்கள் கையில், கத்திரிக்கோலும், அளவு கோலும் இருக்கும். தெருவில் போகிறவர்களின் தாடிகளை அளவுகோல் கொண்டு அளந்து பார்ப்பார்கள். அது நான்கு விரற்கடை நீளத்துக்கு மேல் இருந்தால் கத்திரிக்கோலால் கத்திரித்து விடுவார்கள்.

'இப்படியும் ஓர் அரசர் நம் நாட்டை ஆண்டாரா?' என்று ஆச்சரியப்படாதீர்கள். அவர் வேறு யாருமில்லை, அவுரங்கசீபுதான்!

— ஆதாரம்: 'டெகின்கெஸ்டு' எழுதிய ''மாபெரும் புரட்சி வீரன்''

தகவல்: 'தக்கோலம் அ. முஸ்தபா.'



''நூறு ரூபாய் நோட்டைச் சுருட்டிக் காதில் வெச்சுக்கிட்டு டிபன் சாப்பிட றீங்களே, ஏன் சார்?''

''நான் மூணாவது மசால் ரோஸ்ட் ஆர்டர் பண்ணினப்ப சர்வர் பார்த்த பார்வை சரியில்லிங்க!''

— ஞா. ஞானமுத்து.



''தலைவருக்கு எப்பவும் லஞ்சத்தைப் பற்றித்தான் நினைப்பு!''

''என்ன விஷயம்?''

''நேற்று பழனியில் மீட்டிங் முடிஞ்சதும் மறக்காமல் நாலு டின் லஞ்சாமிர்தம் வாங்கிக் காரில் வைக்கச் சொல்றார்!''

— ஞா. ஞானமுத்து

''டாக்டர்! உடம்பு இளைக்கறதுக்காக நீங்க எழுதிக் கொடுத்த ஆயிரம் மாத்திரையையும் நான் எப்படிச் சாப்பிடறது?''

''இது சாப்பிடறதுக்கில்லே. தினமும் இந்த மாத்திரையைத் தரையில் கொட்டிட்டு, ஒவ்வொண்ணாக் குனிந்து பொறுக்கி எடுத்துப் பெட்டியில் போட்டால் போதும்!''

— ஞா. ஞானமுத்து.






உயிரின் வேரில் உரமென வெடியைத்
தூவிய பொழுதும்; தூரிகைக் கிளையை
தீக்குயில் அலகால் தீண்டிய பொழுதும்;
மௌனம் உடைந்து மனத்தின் சன்னலில்
வழிந்த பொழுதும்; வாசம் படரும்
மல்லிகைக் கனவுகள் மரித்த பொழுதும்;
நாட்களின் கரையில் நைட்ரிக் நதிகள்
பெருகிய பொழுதும்; வீணை மேனியை
ஊமை விரல்கள் உழுத பொழுதும்;
இரும்புப் பாலை இதயம் குடிக்கும்
நம்பிக்கை எனக்குள் நாற்காலி போடும்
சோழிகள் தேறியா சூரியன் தேயும்?

— மானா. பாஸ்கரன்

இதுவரையில் ரமணியின் பேச்சையும் மயில்சாமியின் முரட்டுத்தனத்தையுமே பார்த்து ரசித்துக் கொண்டிருந்த வெங்கி, மயில்சாமி கழியை எடுத்து ரமணியைத் தாக்க ஓங்கினதும் மின்னலாகப் பாய்ந்தான். மறுகணம் கெட்டியான மர உருளை அவனுடைய கைக்கு வந்தது.

''டேய் மயில்சாமி, உன்னை இங்கேயே தீர்த்துப் புடுவேன்... ரமணி சாரை அடிக்கவா பார்க்கறே?''

''தாங்க்ஸ் வெங்கி!'' என்ற ரமணி, ''பட்டை அடிச்சுட்டு வந்து நிக்கறான். அவனை மொதல்லே ஆபீசுக்கு வெளியே தள்ளிட்டுப் போ... நான் போலீசுக்குப் போன் பண்றேன்'' என்றான்.

''யோவ் குமாஸ்தா, என் மருமகப் புள்ளையை ஏமாத்திட்டே இல்லே... நான் இப்ப போறேன்யா... நேரே பொண்ணையும் அழைச்சுட்டுப் போலீசுக்குப் போறேன். வக்கீல்ட்டே போறேன்.''

மயில்சாமி கத்தி விட்டு நகர்ந்தான்.

''ரமணி சார், நீங்க அந்த ஆளைக் கண்டுக்காதீங்க.. நாய் குரைக்கிறது'' என்ற வெங்கி, ''ஏண்டா லட்சாதிபதி, உனக்கு ஊர்ல வேறே பொண்ணா கிடைக்கலே... போயும் போயும் ஒரு சாக்கடையின் பொண்ணைக் கட்டினியே!'' என்று ரங்கனிடம் சீறினான்.

இன்னும் பயத்தில் வெலவெலத்துப் போய் நின்ற ரங்கன் பதில் ஏதும் கூறவில்லை. என்ன சொல்லுவது?

அவனுக்கு லாட்டரியில் முதல் பரிசு விழுந்திருக்கிறது. என்ன புண்ணியம்? மயில்சாமி அதில் உரிமை கொண்டாடத் தொடங்கி விட்டான். நேரே தனத்திடம் போவான். அவளையும் மூட்டி விடுவான். இந்த லாட்டரிப் பணம் இன்னும் என்னென்ன அனர்த்தங்களையும் விபரீதங்




அதிர்ஷ்ட தேவதை

களையும் கொண்டு வரப் போகிறதோ!

ஒன்று மட்டும் அவனுக்குத் தெளிவாகப் புரிந்தது. பரிசு தனக்குத்தான் கிடைத்திருக்கிறது என்று ரமணி மயில்சாமியிடம் அழுத்தத்துடன் கூறியிருக்கிறான். இது அவனைத் தனத்திடமிருந்தும் மயில்சாமியிடமிருந்தும் காப்பாற்றத்தான். இத்தகைய உள்ளம் படைத்த ஒரு நல்ல மனிதனை மாலு கோடுகள் வரைய உபயோகிக்கும் கழியால் மயில்சாமி தாக்க இருந்தானே! ரமணியின் மண்டை பிளந்து போயிருக்குமே! அப்புறம் இந்த உலகத்தில் உதவி செய்ய யார் இருக்கிறார்கள்? அவனுடைய லாட்டரிப் பணத்தை யாரால் கச்சிதமாக நிர்வாகம் செய்ய முடியும்?

''ரங்கா!''

ரமணியின் குரல் கேட்கவே, அவன் தலை நிமிர்ந்து பார்த்தான்.

''நீ ஏன் உன் மூஞ்சியைத் தொங்கப் போட்டுட்டு நிக்கறே... நான் நாகரீகமாப் பேசினேன். வெங்கி நாக்கைப் பிடுங்கிக்கற மாதிரிக் கேட்டான். அவ்வளவுதான்.''

''எல்லாம் என் தப்புத்தான். ரமணி சார்... நீங்க சொல்லியும் கேளாம ஆபீசுக்கு வந்தேன்'' ரங்கன் கேவினான்.

''உனக்குப் போக வேற இடம் இல்லே. அதான் வந்தே... சரி, முதலாளி என்ன சொன்னார்?''

மறுபடியும் அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. ரங்கனால் அடக்கிக் கொள்ள முடியவில்லை.

''நாளையிலிருந்து நான் ஆபீசுக்கு வர வேண்டாம்னு சொல்லிட்டார்.''

ரமணி சிரித்தான்.

''எப்படி ரங்கா, ஒரு லட்சாதிபதி ப்யூனா தொடர்ந்து இருக்க முடியும்?''

''என்ன ரமணி சார், சும்மா சும்மா லட்சாதிபதி லட்சாதிபதின்னு கேலி செய்யறீங்க...''

''நான் சொல்றது கேலியாப் படறதா? சரி சரி, நீ கிச்சாமிகிட்ட இந்த மாசத்துச் சம்பளத்தை வாங்கிகிட்டு வீட்டுக்குப் போ!''

''நீங்க போறப்ப நான் கூட வர்றேன்... மயில்சாமி என்னை என்ன செய்வானோ, பயமா இருக்கு.''

''உன் கையிலே பணம் வர்ற வரைக்கும் அவன் ஒன்றும் செய்ய மாட்டான்.''

''ரமணி சார்!''

''என்ன ரங்கா?''

''என் பெட்டியை எடுத்துட்டு வரலாமா?''

''ஏன் சாக்கு சொல்றே? 'என் மனைவி தனத்தைப் பார்த்துட்டு வரேன்'னு சொல்லேன்.''

ரங்கன் தலை குனிந்தான்.

''கடைசியா ஒரு தடவை பார்த்துட்டு வா... தப்பு இல்லை. ஆனா அவ ஏதானும் வம்பு பண்ணினா, இல்லே மிரட்டினா பயப்படாதே... நீ சோனிதான். ஆனா பணம்கற பலம் இருக்கு.. அவ கத்தினா நீ திருப்பிக் கத்து... சேலம் போன விஷயத்தை மட்டும் சொல்லிடாதே... அப்புறம் அவ நேரே அங்க போய் பாங்க் மானேஜரையே பார்த்துடுவா.''

''சரி, ரமணி சார்.''

தனத்துக்குப் பசித்தது. ஆனால் வாய்க்கு எதுவும் பிடிக்கவில்லை. ரங்கன் என்ன ஆனான்? லாட்டரிப் பணம் என்னாயிற்று? ரமணி என்னென்ன தில்லுமுல்லுகள் செய்கிறான்? அவனை எப்படிச் சமாளிப்பது?

''தனம்.... தனம்''

மெல்லிய குரலை உடனே அடையாளம் கண்டு கொண்ட தனம், அவசர அவசரமாக எழுந்து கதவைத் திறந்தாள்.

''தனம், நான்தான்... நான்தான் வந்திருக்கேன்!''

''அதான் தெரியுதே... ஆமாம் நீ எங்கே திடீர்னு சொல்லாம கொள்ளாம அம்பேலாயிட்டே...?''

''முதலாளி அவசர வேலையா வீட்டுக்கு வரச் சொன்னாரு.''

''ஏன்யா எங்கிட்டேயா ரீல் வுடறே நீ... ஆபீசுக்குப் போனா, அங்கே நீ இல்லே... அந்த ரமணி அய்யரு இல்லே, அந்த மாலுப் பொண்ணு இல்லே... அல்லாரும் சேர்ந்து என்னாய்யா சதி செய்ஞ்சீங்க?''

''சதி எதுவும் செய்யலே, தனம்.''

''லாட்டரிப் பணம் என்னாய்யா ஆச்சு? கொணாந்திருக்கியா?''

''இல்லே!''

''ஏன்.... ஏன் கொணாரலே?''

''லாட்டரி டிக்கட்டுக்கு உடனே பணம் கெடைக்காது தனம்... ஒரு மாசம் ரெண்டு மாசம் ஆகும். ஜெய்ப்பூர்னு ஒரு ஊரு வடக்கே இருக்கு. டிக்கட்டை அங்கே அனுப்புவாங்க. வரி, அப்புறம் கமிஷன் எல்லாம் கழிச்சுட்டு, பாக்கிப் பணத்தை அனுப்புவாங்க...''

''ஏன்யா அந்த ஆளு சொல்லிக் கொடுத்த பாடத்தை எங்கிட்டே ஒப்பிக்கிறியா?''

''சத்தியமா இல்லே தனம். பிரைஸ் விழுந்தா முழுப் பணமும் தர மாட்டாங்களாம். இன்கம்டாக்ஸ் பிடிச்சுப்பாங்களாம். அப்புறம் டிக்கட்டு ஏஜெண்ட்டுக்கு வேறே கமிஷன் கொடுக்கணுமாம்.''

''மெய்யாலுமா? இல்லே கதை வுட்றியா?''

''முருகன் மேல ஆணையா!''

''அப்ப எவ்வளவுதான் ஒன் கைக்கு

**ஸ்ரீ.வே.ஆர்.**

வரும்.''

''பதிமூணு லட்சத்துக்குக் கொஞ்சம் அதிகம்.''

''பூ இவ்வளவுதானா... ஆமாம் அதை இன்னா செய்யப் போறே?''

''மொதல்ல பணம் வரட்டும், தனம்.''

''நான் ஒன் பொஞ்சாதி... கந்தசாமி கோவில்ல என் கழுத்தில தாலி கட்டியிருக்கே. பணம் வந்திருக்கேன்னு, என்னை வுட்டுட்டு வேற ஒரு சிறுக்கி பின்னாடி ஓடினே, ஒன் எலும்பை ஒடைச்சுடுவேன்.''

''நீ உடைக்காமப் போனாலும் மயில்சாமி விட மாட்டான், தனம்.''

''இன்னாய்யா சொல்றே நீ?''

ரங்கன் அன்று ஆபிசில் நடந்ததை விவரித்தான். மயில்சாமியிடமிருந்து அவனைக் காப்பாற்ற ரமணி எப்படி ஒரு பொய் சொல்லிச் சமாளித்தான் என்பதையும் கூறினான்.

''இப்ப என் கையில துட்டு இல்லே....!''

''என் கையிலும் பணம் இல்லே தனம்!''

''கடன் வாங்கு.''

''முடியாது தனம்!''

''இன்னாய்யா சொன்னே?''

''கடன் வாங்க முடியாதுன்னு சொன்னேன்!''

''யோவ்!'' தனம் சீறினாள்.

''இதப் பாரு தனம்... இனிமே உன்னால என்னை விரட்ட முடியாது. நீ என் பேச்சுக்கு அடங்கிப் போனா என் பணத்திலே நீ சுகமா இருக்கலாம். ஏறு மாறாய்ப் பேசினே உனக்குச் சல்லிக் காசு கிடைக்காது... இதப் புரிஞ்சுக்க மொதல்ல...''

தனம் வாயடைத்துப் போய் நின்றாள். ரங்கனா இப்படிப் பேசுகிறான். இந்தத் துணிச்சல் எப்படி வந்தது? எங்கேயிருந்து வந்தது? ரமணி இவனுக்கு ஏதானும் ஊசி போட்டு விட்டானோ? பணம் பேச ஆரம்பிக்கிறதா?''

''இந்தாய்யா, நீ இப்பப் பணக்காரன் தான். ஒத்துக்கறேன். அம்பது நூறுன்னு கைமாத்து வாங்கினா அது ஒனக்கு அவமானம்தான். நீ கடன் வாங்கத் தாவலே. நான் வீட்டைச் சமாளிச்சுக்கறேன்... பணம் வர்றப்ப வரட்டும்... நாம் ரெண்டு பேர் தானே! சோத்துக்கா கஸ்டம்?''

''நீ ஒருத்திதான் தனம்!''

''இன்னா சொன்னே நீ?''

''தனம், நான் ஆசைப்பட்டு உன்னைக் கட்டிக்கிட்டது என்னமோ நிசம்தான். ஆனா நீ எதுக்கு இந்தக் குள்ளனை, இந்த நோஞ்சானைக் கட்டிக்கத் தயாரா இருந்தேன்னு எனக்கு அப்பப் புரியலே... ஆனா கலியாணமான அன்னிலிருந்தே நீ என்னை ஒரு புருசனா மதிக்கலே. பணம் காய்க்கிற மரமாத்தான் என்னை உலுக்கி எடுத்தே. இனிமே நீயும் நானும் ஒரே வீட்லே இருந்து வாழறது என்னைப் பொறுத்தவரைக்கும் முடியாத காரியம்.. நான் எங்கே இருந்தாலும் நீ தாராளமாச் செலவு செய்ய மாசா மாசம் பணம் வரும். இப்ப நான் என் பெட்டியை எடுத்துட்டுப் போறேன்.''

ரங்கன் நகர்ந்தான்.

''யோவ், நில்லுய்யா!''

இத்தனை காலமும் கண்களைத் தாழ்த்தியே பார்த்துப் பழக்கப்பட்ட ரங்கன் முதன் முறையாக அவளை ஏறிட்டுப் பார்த்தான். பிறகு விறைப்பாக —

''என்ன வேணும்?''

''நீ என் புருசன். நான் ஒன் பொண்டாட்டி!''

''அதுக்கென்ன இப்ப?''

''ஒனக்கு ஏதானும் ஆச்சுன்னா பணம் அவ்வளவும் எனக்குத்தான் வரும். அதான் சட்டம்.''

''நான் செத்தப்புறம் என் பணம் யார் கைக்குப் போனா எனக்கு என்ன?''

''ஏன்யா, எங்கிட்ட இப்படியெல்லாம் பேச எப்படிய்யா ஒனக்குத் தைரியம் வந்தது? நான் ஏதோ ஒரு பேச்சுக்குத்தான்யா சொன்னேன். நீ சாகணும்னு நான் ஆசைப் படுவேனாய்யா?''

ரங்கன் மேலும் நின்று பேச விருப்பமில்லாமல் பெட்டியை எடுத்துக் கொண்டு புறப்பட்டான்.

''யோவ் நீ நாலு நாளுக்கு ஒரு வாட்டி என்னைப் பார்க்க வராட்டி, நான் கிணத்துலே வுளுந்துடுவேன்... அங்காளம்மன் மேல ஆணையாச் சொல்றேன்.''

மறுநாள் எல்லாத் தமிழ்த் தினசரிகளிலும் அவனுடைய பெயர் வந்தது. ஒரிரு பத்திரிகைகள் அந்த ஞாயிற்றுக் கிழமையன்று, பரிசு பெற்றவருடன் நடத்திய சிறப்புப் பேட்டி வெளிவரும் என்று உறுதி அளித்திருந்தார்கள். முதற் பரிசுச் சீட்டை ரங்கனுக்கு விற்ற கடைக்காரருடைய போட்டோ பிரசுரமாகியிருந்தது.

''ரங்கா, பேப்பரைப் பார்த்தியா?'' என்று கேட்டுக் கொண்டே அறைக்குள் ரமணி பிரவேசித்தான்.

''பார்த்தேன்.''

''சிறப்புக் கட்டுரை வரப் போறதுன்னு எழுதியிருக்காங்க.''

''பார்த்தேன்.''

''பத்திரிகைக்காரங்களுக்கு நீ இப்ப இருக்கிற இடம் தெரியாதே!''

''தெரியாது ரமணி சார்.''

''அப்ப எப்படி பேட்டி காண வருவாங்க?''

''அதான் புரியலே.''

''ஒரு முக்கியமான காரியம் நீ செய்ய வேண்டியிருக்கு, ரங்கா.''

''அது என்ன ரமணி சார்!''

''விடுதலை வாங்கிக்கணும்.''

''அப்படீன்னா?''

''தனம் சும்மா இருக்க மாட்டா... அவ அப்பன் மயில்சாமி கருவிட்டிருக்கான்.




அதனாலே, நீ தனத்தை விவாகரத்து செய்தாகணும்.''

''விவாகரத்தா? அது தப்பில்லியா ரமணி சார்...''

''ஒழுங்காக் குடும்பம் நடந்தா விவாகரத்து தப்புத்தான்... நீதான் குடும்பத்தை ஒழுங்கா நடத்தலியே...''

''கலியாணம் ஆகிக் கொஞ்ச காலம்தான் ஆகியிருக்கு ரமணி சார்.''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. ரங்கா... நீ நிம்மதியா, உயிருக்கு பயமில்லாம வாழணும்னா, லாட்டரிப் பணம் பாங்க்ல வந்து சேர்றதுக்கு முன்னாடி விவாகரத்துக்கான நோட்டீசை நீ அனுப்பியாகணும். நான் உனக்காக வக்கீலைப் பார்க்கிறேன்.''

''என்ன காரணம்னு கேட்டா நான் என்ன சொல்லுவேன், ரமணி சார்?''

''அதை நான் பார்த்துக்கறேன்.''

சொல்லி விட்டு ரமணி வெளியேறினான்.

•

சுகந்தியைப் பொறுத்தவரை ஆபீஸ் வெறிச்சோடியது.

மயில்சாமிக்குப் பதிலாக ஒரு கூர்க்கா காவலாளியாக வந்தான். அவனுடன் ஒரு நிமிடம் கூட அவளால் பேச முடியவில்லை. ரங்கன் இருந்தால் அவனை வம்புக்கு இழுக்கலாம். அவனும் இல்லை. எங்கே வசிக்கிறான் என்று கூடத் தெரியவில்லை. ரமணி எங்காவது அவனை ஒளித்து வைத்திருக்கிறானோ?

நெய் தோசை கிச்சா என்றுமே அவளுடன் அனாவசியமாகப் பேச மாட்டான். மிச்சம் யார் இருக்கிறார்கள். வெங்கி. அவனுக்கு குதிரை பாஷைதான் தெரியும். அப்புறம் மாலு. அவளுக்கு ரமணியுடன் சிரித்துப் பேசவே நேரம் போதவில்லை.

என்ன செய்ய?

திடீரென்று ஒரு குரல் கேட்டது.

''குட்மார்னிங் மேடம்... என் பெயர் சிவலிங்கம். எஸ். லிங்கம்னுதான் கும்பகோணத்திலே எல்லாருக்கும் தெரியும்.''

''இப்ப எனக்கும் தெரிஞ்சுட்டுது. உங்களுக்கு என்ன வேணும்?''

''என் தம்பி ரங்கன் இந்த ஆபீஸ்ல வேலை செய்யறான்.''

''அதோ, அங்கே கண்ணாடி போட்டுட்டு, சிவப்பா ஒருத்தர் உட்கார்ந்திருக்கிறாரே அவரை விசாரியுங்க'' என்றாள் சுகந்தி.

எஸ். லிங்கம் ரமணியை அணுகினான்.

''குட்மார்னிங் சார். என் பெயர் எஸ். லிங்கம். சிவலிங்கம்.''

''கும்பகோணத்திலேந்து வர்றீங்க... அங்கே ஒரு பல சரக்குக் கடை நடத்தறீங்க'' என்றான் ரமணி.

''ஆமாம் சார்... எப்படி சார் தெரியும் உங்களுக்கு... நீங்களும் கும்பகோணம் தானா? என் கடைக்கு வந்திருக்கீங்களா?''

''நீங்க யாருன்னு தெரிஞ்சுக்க நான் ஏன் கும்பகோணம் வரணும், லிங்கம்? உங்க தம்பி ரங்கனைத்தான் ஆறு வருஷம் முன்னாடி அடிச்சு விரட்டிட்டீங்களே!''

லிங்கத்தின் முகம் சுருங்கியது.

''சரி, என்ன விஷயமா நீங்க வந்திருக்கீங்க?''

''எனக்கு என் தம்பியைப் பார்க்கணும்.''

''தம்பியைத்தான் நீங்க என்னிக்கோ கை கழுவி விட்டாச்சே, மிஸ்டர் லிங்கம்.''

''அது எங்க குடும்ப விஷயம். ரங்கன் இப்ப எங்கே இருக்கான்?''

''என் பாதுகாப்பிலே!''

''அப்படீன்னா?''

''அவனை நான் ஜாக்கிரதையாப் பார்த்துக்கறேன்னு அர்த்தம்...''

''நாங்க சந்திக்க நீங்க உதவி செய்யணும்.''

''செய்யறேன்.''

''எப்ப எங்கே பார்க்கலாம்?''

''மயிலாப்பூர்லே லஸ்னு ஒரு இடம் இருக்கு. அந்த லஸ்லே நாகேஸ்வர ராவ் பார்க் அப்படீன்னு ஒரு பார்க் இருக்கு. இன்னிக்குச் சாயங்காலம் சரியா ஆறு மணிக்கு நீங்க அங்கே வந்தீங்கன்னா ரங்கனைப் பார்க்கலாம்.''

''ரொம்ப தாங்க்ஸ்..''

''ஒரு விஷயம் தெரியுமா, மிஸ்டர் லிங்கம்?''

''என்ன சார்?''

''உங்க தம்பி ரங்கனுக்கு ராஜஸ்தான் லாட்டரியிலே முதல் பரிசா இருபத்தஞ்சு லட்சம் விழுந்திருக்கு.''

''அது தெரிஞ்சுதான் நான் கும்பகோணத்திலிருந்து வந்திருக்கேன், சார். என் தம்பி படிப்பறிவு இல்லாதவன். ரொம்ப சாது. சாமர்த்தியம் போதாது. அவனுக்கு நல்லது பொல்லாதது சொல்ல யார் இருக்காங்க?'' என்றான் லிங்கம்.

''அதான் நீங்க வந்துட்டீங்களே!'' என்றான் ரமணி, சிரித்துக் கொண்டே.

(தொடரும்)

நீங்கள் கேட்டவை — தராசு

# அ.தி.மு.க.வில் யார் கை ஓங்கியிருக்கிறது?

* என். அருண், ஈரோடு.

? மரணம் பற்றிய பாரதி பாடலுக்கு வலம்புரி ஜானின் விளக்கம் என்ன என்று கூறியிருக்கலாம்; அல்லது அது இடம்பெற்றுள்ள புத்தகத்தையாவது குறிப்பிட்டிருக்கலாமே?

! ஸாரி, நான் குறிப்பிட்டது மேடைப் பேச்சு. அதைக் கேட்டு அனுபவிப்பதில் தான் ரசனை!

* என். ஆர். சுப்பிரமணியன், பூனாம் பாளையம்.

? 'பத்திரிகைகளின் கடமை செய்தியைத் தெரிவிப்பதுதான்; கருத்தை அல்ல' என்று தேவிலால் கூறியிருக்கிறாரே?

! 'பத்திரிகையைப் படிப்பதுதான் தேவிலாலின் வேலை. அதுபற்றிக் கருத்துத் தெரிவிக்கக் கூடாது' என்று நாம் சொன்னால் கேட்பாரா? செய்தி வெளியிடுவதுடன், செய்தி விமர்சனம் செய்து கருத்துத் தெரிவிப்பதும் ஜனநாயகத்தில் பத்திரிகைகளின் தலையாய கடமை. 'பல்வேறு கருத்துக்கள் வருமே, எதை ஏற்பது?' என்றால், 'இப்படி செய்தி கடையப்படும் போதுதான் உண்மை திரண்டு வரும்' என்பதே பதில். பலவிதக் கருத்துக்களையும் அலசிப் பார்க்கும் போது உண்மை எதுவென்று வாசகனுக்குப் புரிந்து போகும்.

* வண்ணை கணேசன், சென்னை — 11.

? அ. தி. மு. க. வில் இப்போது யார் கை ஓங்கியிருக்கிறது?

! காங்கிரஸின் 'கை.

* மேலை. பழ. நாகப்பன், சென்னை.

? செப்டம்பர் 30க்குள் மாநகராட்சித் தேர்தலாமே, நம்பலாமா?

! ஆள் காட்டி விரலில் புள்ளி வைத்த பிறகுதான் நம்புவேன்!

* மேஜர் தாசன், ஈரோடு.

? மம்முட்டி நடித்த தமிழ்ப்படம் எப்படி?

! தமிழ் ஹீரோக்கள் பலருக்கு உள்ளூர கிலி ஏற்படுத்தியிருக்கிறது!

* மு. பாரக், தக்கோலம்.

? திட்டக் கமிஷனை ரயில் இஞ்சினுக்கும் மாநிலங்களை ரயில் பெட்டிகளுக்கும் ஒப்பிட்டுப் பேசியுள்ளாரே, கலைஞர்?

! இந்தியாவில் நாளுக்கு நாள் ரயில் விபத்துக்கள் அதிகரித்து வருவதால் முதல்வரின் உவமை-கவலை அளிக்கிறது!

* கிஷோர், திருச்சி.

? 'மத்திய மாநில அரசுகளுக்கிடையே உள்ள நல்லுறவைக் கெடுப்பதற்குப் பத்திரிகைகள் முனைகின்றன' என்று கருணாநிதி கூறுகிறாரே?

! இவர்கள் வாசிப்புக்கு ஏற்ற மாதிரி நாம் 'ஜிங் சக்' போட வேண்டும். 'சரியான தாளத்துக்கு ஏற்பச் சிறப்பாக வாசியுங்கள்' என்று சொல்லக் கூடாது! உடனே, 'என்னைக் கெடுக்கச் சதி; நல்லுறவைக் கெடுக்கச் சூழ்ச்சி' என்று ஆரம்பித்து விடுவார்கள்! இந்த விஷயத்தில் தேவிலால், ராஜீவ், கருணாநிதி எல்லாரும் ஒன்றே!

* பா. வேங்கடேசன், போரூர்.

? ஈரானை இவ்வளவு பெரிய சோகம் தாக்கியுள்ளதே?

! "ஈழத்தின் சோகம் நம்மை அதிகமாக வருத்தமடையச் செய்வது நம்மவர் என்ப



* வி. ஐ. பி. விளக்கம்...



* 'இருபது வருஷம் போதும்!'



* கவலை தரும் உவமை...



...லி உண்டாக்கினார்!"



தால் மட்டுமல்ல; 'அது இயற்கை விளைவித்த சோகம், இதுவோ மனிதனால் உருவாக்கப் பட்ட சோகம்' என்பதும் காரணம். இதனால் ஈரானிய மக்களிடம் நமக்கு அனுதாபம் இல்லை என்பதல்ல அர்த்தம். இந்தச் சோதனையிலிருந்து அவர்கள் மீண்டு, புனர் நிர்மாணப் பணிகளில் வெற்றி பெறப் பிரார்த்திப்போம்.

* **ராஜேந்தர் பிரியன், திருச்சி.**

? **'ஈழப் பிரச்னையில் எங்கள் இருவர் (மத்திய, மாநில) கருத்துக்களும் ஒன்றே' என்கிறாரே, நமது முதல்வர்?**

! 'நான் என் கருத்தை மாற்றிக் கொண்டிருக்கிறேன்' என்று வெளிப்படையாகக் கூறுவதற்குப் பதில் இப்படி மறைமுகமாகச் சொல்லியிருக்கிறார் என்றால் அதனை வரவேற்கலாம்.

* **எஸ். யோகலிங்கம், சென்னை.**

? **தேனாம்பேட்டையில் ராதா ரவி, எஸ். எஸ். சந்திரன் ஆகியோர் நடத்திய கலாட்டா பற்றி?**

! கடமை, கண்ணியம், கட்டுப்பாடு ஆகியவற்றோடு கலாட்டாவையும் சேர்த்துக் கொள்ளலாமே என்றுதான்...

* **இசைவல்லான், சென்னை.**

? **அத்வானி கல்கிக்கு அளித்துள்ள பேட்டியில், 'தமிழக இளைஞர்கள் சிந்திக்கத் தொடங்கட்டும்' என்று கூறியுள்ளாரே? தமிழக இளைஞர்கள் சிந்திக்கத் தெரியாதவர்கள் என்பது அவரது எண்ணமா?**

! சிந்திக்கத் தெரிந்தவர்கள் என்று அவர் நம்புவதால்தான் அப்படிக் கேட்டுக் கொள்கிறார். ஒரு புதிய சிந்தனையை ஊக்குவிக்க முற்படுகிறார். சிந்திக்கத் தெரியாதவர்கள் நம் இளைஞர்கள் என்று அவர் கருதியிருந்தால் அந்த வேண்டுகோளை அவர் விடுத்திருக்கவே மாட்டாரே!

* **ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.**

? **சமீபத்தில் தங்கள் மனத்தை மிகவும் பாதித்த விஷயம்?**

! மேற்கு பெர்லினில் அதிகாரபூர்வமாக அனுமதி பெற்றுக் கரன்ஸி மாற்றுவோர், நூறு ரூபாய்க்கு எட்டு மேற்கு ஜெர்மன் மார்க்குகள் தருகிறார்கள். நூறு ருஷ்ய ரூபிள்களுக்கும் அதே எட்டு மார்க்குகள் தருகிறார்கள். அதாவது ரூபாயும் ரூபிளும் அவர்கள் பார்வையில் சம' அந்தஸ்து வகிக்கிறது. ஆனால் நாமோ ருஷ்யாவுடன் செய்யும் வியாபாரத்திலெல்லாம் ஒரு ரூபிளுக்குக் கிட்டத்தட்ட 25 ரூபாய் கணக்கில் தருகிறோம்! ருஷ்யா 'நேச நாடு,' 'நட்புறவு நாடு' என்று கூறிக் கொண்டு இப்படி ஏமாந்து வருகிறோம். மறுபரிசீலனை தேவை.

* **கமலவேணி, சென்னை.**

? **வி.ஐ.பி. என்றால் "Very Ignorant Person" என்று புது விளக்கம் தருகிறாரே, தேவிலால்?**

! பல சந்தர்ப்பங்களில் இது உண்மை என்பது போல்தான் வி. ஐ. பிக்களும் நடந்து கொள்கிறார்கள். ஏன், சமீபத்தில், 'இருபது வருஷங்கள் தாக்குப் பிடிக்கிற மாதிரி கட்டடங்கள் கட்டினால் போதும்' என்று ஹெக்டே கூறியிருப்பதே அவ்வாறுதான் நம்மை எண்ண வைக்கிறது. திட்டக் கமிஷன் துணைத் தலைவர் இப்படிப் பேசலாமா? ஏற்கெனவே ஹவுஸிங் போர்டு, குடிசை மாற்று வாரியக் கட்டடங்களின் தரம் நமக்குத் தெரியும். இனி கட்டிய மறுவாரமே காரை பெயர ஆரம்பித்தால், விரிசல் விட்டால் வியப்பதற்கில்லை. அப்புறம் பாலங்கள், அணைகள் இவற்றின் கதி என்ன ஆவது?

* **கே. ஆர். பவானி, சென்னை.**

? **எரிபொருள் சிக்கனத்துக்காக அரசு மேற்கொண்ட நடவடிக்கையை ஆதரிக்கிறீர்களா?**

! ஞாயிற்றுக்கிழமை போட வேண்டிய பெட்ரோலை சனிக்கிழமையே போட்டுக் கொள்வதில் என்ன சிக்கனம் இருக்கிறது? ஒரு சொட்டுச் சிக்கனமும் இல்லை. சென்ற ஆண்டைவிட இந்த ஆண்டு அரசு இலாக்காக்கள் இருபது சதம் பெட்ரோல் குறைவாகப் பயன்படுத்த வேண்டும் என்னும் போது, அரசு கார்கள் அந்த அளவுக்குக் குறைவாகப் பயன்படுத்தப்படுகின்றன. அதனால் மூலதனம் முடக்கப்படுகிறது. மக்களுக்கு நஷ்டமே. அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு அரசுப் பணிகளுக்குக் கார்கள், ஜீப்கள் புதிதாக வாங்கப் போவதில்லை என்று தீர்மானித்தால் அது நல்ல முடிவு. இருக்கிற வாகனங்களில் அரசு ஐந்து சதம் விற்று விட்டாலும் நல்ல முடிவு. இதற்கெல்லாம் துணிவு வேண்டும்.

* **ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**என். ஆர். சுப்பிரமணியன்,**
**பூனாம்பாளையம் (தெற்கு),**
**திருவெள்ளாரை (வழி),**
**திருச்சி — 621 009.**

# மை உலர்வதற்குள் நடந்து விட்டது!

* 'தி. மு. க. அரசு, வேறு வழி இன்றித் தனது பழைய நாள் அரசி யல் பாதைக்குத் திரும்பிக் கொண் டிருக்கிறது. இதன் விளைவாக, தி. மு. க., தான் அங்கம் வகிக்கும் தேசிய முன்னணிக்கும் அவப் பெயர் தேடித் தந்து கொண்டிருப் பதை உணர வேண்டும்' என்ற எல். கே. அத்வானியின் கூற்று முற்றி லும் உண்மையே.

திருச்சி — 17, எஸ். கே. பாரி.

* ஆளும் கட்சிக்கு ஆதரவு தரும் கட்சித் தலைவராய் இருந்த போதிலும் கூட, அரசின் செயற் பாடுகள் குறித்து அத்வானி கொடுத்த பதில்கள் அனைத்தும் அட்டையில் வீற்றிருந்த அவரைப் போலவே கம்பீரமானவை!

தக்கலை, விலா இராம்.

* அத்வானியின் பேட்டி படித் தேன். சிறப்பாகவும் கச்சிதமாக வும் இருந்தது. அத்வானி ஒரு பெரிய அரசியல் தலைவர். அதுவும் நேர்மையானவர். அப்படிப்பட்ட வரின் படம் ஒன்றே ஒன்றுதானா கிடைத்தது உங்களுக்கு?

தக்கோலம், அ. முஸ்தபா.

* கடந்த 19.6.90 மாலை சென்னையில் நிகழ்ந்த படு கொலை, தமிழகத்தையே உலுக்கி வரும் சூழலில், அந் நிகழ்ச்சிக்கு முன்பே அச்சாகி விட்ட தங்கள் இதழ்த் தலையங்கத்தின் தீர்க்க தரிசனப் பார்வை, வியக்க வைக் கிறது. இத்தகைய தொலைநோக்கு, நம்மை ஆள்வோர்க்கு இல்லையா? இருந்தும் மெத்தனமா? இதுதான் துரதிருஷ்டம்!

மதுரை — 16, எம். ஏ. கவிலா.

* 'இலங்கையில் நடந்தது தமிழ கத்திலும் நடவாது என்பதற்கு என்ன உத்தரவாதம்?' என்று தலையங்கத்தில் எழுதிய உங்கள் எழுத்து அச்சில் உருப்பெற்று மை உலருமுன்பே அந்தக் கோரச் சம்பவங்கள் நடந்துதான் விட்டன! இனி எடுக்கப்படும் நடவடிக்கை களாவது உறுதியானதாக இருக் குமா?

மேல்பட்டி, எல். மாறன்.

* ஜனநாயக மரபு பற்றிய கேள் விக்குத் தராக அளித்த பதில் உண்மையான காங்கிரஸ்காரர் களைச் சிந்திக்க வைக்கும் என்பது சர்வ நிச்சயம்.

வேலூர், கே. ஆர். தேவேந்திரன்.

* பெண் குழந்தைகள் ஆண்டு நடைபெறும் சமயத்தில், ICCW, CRY போன்ற சமூகநல அமைப் புகளின் செயல்கள் மூலம் சிசுக் களுக்கும், குழந்தைகளுக்கும் நன்மை கிடைக்கிறது என்ற செய்தி மகிழ்ச்சி நிறைந்த நிம்மதியைத் தருகிறது.

பாளையங்கோட்டை, சென்டர் ராமசாமி.

**வட்டமேஜை**




* ஆந்தைப் பொம்மைகள் பற்றிய கட்டுரை வெகு ஜோர். என்றாலும் சின்னக் குறை! ஆந்தை கள் படத்தை வண்ணத்தில் பிரசுரித்திருக்கக் கூடாதோ?

தஞ்சை, கே. ஆர். மூர்த்தி.

* விலா கிருஷ்ணனின் "பத்தாம் பசலி," ராமப்ரியாவின் 'விரிசல்', அனுராதா ரமணின் 'பயம்' மூன்று சிறுகதைகளுமே நல்ல செலக்ஷன்.

சென்னை — 45, அ. ஜப்பார் காதர்.

* ஓவியர் வரைந்திருந்த அந்தக் குண்டுக் குழந்தையின் முகமே 'பத்தாம்பசலி' சிறுகதையைப் படிக்கத் தூண்டி விட்டது.

மாளம்புச்சாவடி, இரா. ஆதி நாராயணன்.

* அனுராதா ரமணனின் 'பயம்' சிறுகதை வித்தியாசமான முறை யில் அமைந்திருந்தது. கதையும் அதைக் கொண்டு சென்ற விதமும் முடித்திருந்த பாங்கும் அற்புதம்.

தஞ்சை, பழ. வள்ளியப்பன்.

* வர வரக் கல்கியில் வெளியாகும் சிறுகதைகளை வரிசைக்கிரமமா கத் தரம் பிரிக்கவே இயலவில்லை. ஒவ்வொரு சிறுகதையும் மற் றொன்றை மிஞ்சும் வண்ணமாக அமைந்து விடுவதே காரணம். சிறுகதைகளைத் தேர்வு செய்யும் உமது ஆசிரியர் குழுவைப் பொதுக் கூட்டம் போட்டுப் பாராட்ட வேண்டும் போல் இருக்கிறது!

நெல்லிக்குப்பம், ரா. ஜோதி ராமன்.

* உ. உ. உ. கோபுரம் பற்றி, 'ஆனந்தி' நீண்ட இடைவெளிக்குப் பின் எழுதியிருந்தது பக்திப் பரவச மூட்டியது!

சென்னை — 39, சிம்மவாஹினி.

* முத்துஸ்வாமி தீக்ஷிதர், 'காசி விச்வேச்வர ஏஹி, மாம்பாஹி' என்ற காம்போதி ராகக் கீர்த்தனை யில் 'தக்ஷிண காசி' என்ற சொல் லைப் பயன்படுத்தியிருப்பது உண்மைதான்... ஆனால் இது தென்காசியைக் குறிக்காது. திருவாரூர் திருத்தலத்தின் மேற்கே இரண்டு மைல் தொலைவில் உள்ள கர்த்தீரம் எனும் குழிக்கரையில் பாடப் பெற்றது இந்தக் கீர்த்தனை.

திருவாரூர், பா. கணபதி சுப்பிர மணியன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

பருவமிது
சாக்லேட்
சாப்பிடுவதற்கு

"ஏன் ஒரு சாக்லேட்டும் என் உறுதியான ஸிபாகா பற்களை கெடுக்க முடியவில்லை?"

இது சாதாரணம், பாருங்களேன். நான் சாக்லேட்களை சுவீகாரம் செய்வது போல, வழக்கமாக ஸிபாகா ஃப்ளோரைட் உபயோகித்து என்னுடைய பற்களைத் தேய்க்கிறேன்.

ஸிபாகாவினுடைய செழிப்பான நுரை சுத்தப்படுத்தி எல்லா சாக்லேட் துணுக்குகளை நீக்குகிறது. அதனுடைய பிரத்தியேகமான ஃபார்முலா பற்கள் கெட்டுப் போகாமல் பாதுகாக்கிறது.

ஆகையால் ஸிபாகா ஃப்ளோரைடுக்கு நன்றி. என் முப்பத்திரண்டு பற்களும் பளிச்சிடும் வெண்மையுடன் வாழ்நாள் முழுவதும் உறுதியாக இருக்கும், சாக்லேட் எல்லாம் இருந்தும் கூட.

பற்களுக்கு பலம். என்றென்றும் தரும்.




ULKA-13196 TAM

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka